# செந்தமிழ்ச் செல்வி

## உள்ளுறை




சிலம்பு-௫௨ ] வள்ளுவர் ஆண்டு ௨௦௦௯, பங்குனி. (Apr. 78) [ பரல்-௮

# ‘செந்தமிழ்ச் செல்வி’

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)



---



---

# நூல் வெளியீட்டு விழா (2, 3-4-'78)



தணிகைமணி திருமுறைச் சொற்பொழிவு விழாவில் கல்வியமைச்சர், அறநிலைய ஆணையர் எம். கே. பாலசுப்பிரமணியம் முதலியோர்



மாண்புமிகு செ. அரங்கநாயகம் பேருரையாளர் கு. சுந்தரமூர்த்திக்குரிய பரிசுத் தொகை வழங்குதல்



மாண்புமிகு இராம. வீரப்பன் கீ. இராமலிங்கனார்க்குப் பொன்னாடை போர்த்துதல்



அமைச்சர் மாண்புமிகு இராம. வீரப்பன் 'தமிழில் எழுதுவோம்'
நூலை வெளியிட்டுச் சட்டத்துறை ஆட்சிமொழி ஆணையத் தலைவர்
மாண்பமை நீதிபதி சு. மகராசன் அவர்களிடம் வழங்குதல்



'சிலப்பதிகாரம்' (ஆங்கிலம்) வெளியீட்டு விழாவில்
அமைச்சர் இராம. வீரப்பன் சிலம்புச் செல்வர் ம. பொ. சி
டாக்டர். மால்கம் ஆதிசேஷய்யா, வி ஆர் இராமச்சந்திர
தீட்சிதர் மனைவி, மகன், பேரன் மற்றும் குடும்பத்தினர்

# செந்தமிழ்ச் செல்வி

## திங்கள் வெளியீடு

| சிலம்பு ௫௨ | திருவள்ளுவர் ஆண்டு ௨௦௦௯, பங்குனி<br>ஏப்பிரல் 1978 | பரல் ௮ |
|---|---|---|


## மூன்ருவது திருமுறைப் பரிசுச் சொற்பொழிவும் ஐந்து அரிய நூல்கள் வெளியீட்டு விழாவும்

தணிகைமணி திரு வ சு. செங்கல்வராய பிள்ளை அவர்கள் பெயரில், கழகம் நிறுவியுள்ள பரிசுத்திட்டத்தின்கீழ் மூன்ருவது சொற்பொழிவும், அச் சொற்பொழிவு நூல் உள்ளிட்ட ஐந்து அரிய நூல்கள் வெளியீட்டு விழாவும் 2, 3-4-78 ஆம் நாள்களில் வள்ளலார் திருவருள் மண்டபத்தில் மிக்க சிறப்புற நடைபெற்றன.

எமது வேண்டுகோட்கிணங்கிப் பேருரையாளர் சுந்தரமூர்த்தியவர்கள் சுந்தரர் வரலாற்ருராய்ச்சியைத் திறம்பட உருவாக்கி உரை நிகழ்த்திப் பரிசு பெற்றுள்ளார். அன்னர்க்கு எம் வாழ்த்தினையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்ளுகின்ரேம்.

இவ்வாராய்ச்சி நூலினையும் மதுரை மீனுட்சியம்மை சந்தத் திருவடி மாலை என்னும் இசைத் தமிழ் இலக்கியத்தையும் வெளியிட்டு அறநிலையத் துறை ஆணையாளர் உயர்திரு எம். கே. பாலசுப்பிரமணியம் அவர்கள் ஆற்றியவுரை பயனுடைய சொற்பொழிவாக அமைந்திருந்தது மகிழ்ச்சிக்குரியது.

டாக்டர் சொ. சிங்காரவேலனுர் அவர்களின் அழகிய படைப்பாகிய 'ஊமைக்குயில்' நாடகமும் மனேன்மணீயத்தை

நினைவூட்டும் வகையில் அமைந்திருந்தது. சுருங்கக்கூறின் இவ் விழா ஒரு முத்தமிழ் விழாவேபோல் அமைந்து அன்பர்களை மகிழ்வித்தது.

அங்ஙனமே சிலப்பதிகார ஆங்கில ஆக்க நூலும், தமிழில் எழுதுவோம் என்ற நூலும் தமிழ் வளர்ச்சிக்கு ஆங்கில ஆக்கமும் தனித்தமிழ் முயற்சியும் தேவை என்னுமாறு அமைந்திருந்தன எனலாம்

இருநாள் விழாக்களிலும் முறையே அமைச்சர்கள் மாண்புமிகு அரங்கநாயகமும், மாண்புமிகு இராம. வீரப்பன் அவர்களும் வந்திருந்துசிறப்பித்தமைக்கும் எமது உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

துணைவேந்தர் ஆதிசேசையா அவர்கள் ஆர்வத்தோடு தமிழில் பேசிச் சிலப்பதிகாரத்தை வெளியிட்டமை எண்ணி மகிழ்தற்குரியது. அவர்கட்கும் தலைமை தாங்கிய சிலம்புச் செல்வர் அவர்கட்கும் எமது நன்றியை உரிமையாக்குகின்றோம்.

மற்றும் சிலப்பதிகாரத்தை ஆங்கிலத்தில் தந்த தீட்சிதரின் குடும்பத்தாரும் உறவினர்களும் வந்திருந்தது விழாவிற்குத் தனிச்சிறப்பாகும்.

விழாவிற் பங்குகொண்டு சிறப்பித்த அனைவருக்கும் வருகை தந்து சிறப்பித்த பேராசிரியர்கள் அ. கி. பரந்தாமனார், க. வடிவேலாயுதனார், முன்னாள் உயர்நீதிமன்ற நடுவரும் இந்நாள் சட்டத்துறை ஆணையத்தலைவருமான மகராசன், துணைத் தலைவர் சிதம்பரம் ஓய்வுபெற்ற பொறித்துறைத் தலைவர் சே. பா நமசிவாயம், பல் மருத்துவர் கண்ணப்பர் முதலிய பெருமக்களுக்கும் கழகத்தின் நன்றி உரியது.

மறைமலையடிகள் நூல் நிலைய வளர்ச்சிக்காக ஸ்டேட் பாங்கு திரு. பா. நமசிவாயம் அவர்கள் உருவா 101 (நூற்றுஒன்று) நன்கொடையாக அளித்துள்ளார்கள், அவர்கள் பேருள்ளத்தைப் பாராட்டுவதோடு நன்றியும் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

———

# மூன்ருவது திருமுறைப் பரிசுச் சொற்பொழிவும், ஐந்து அரிய நூல்கள் வெளியீட்டு விழாவும் (2-4-78)

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் மூன்ருவது திருமுறைப் பரிசுச் சொற்பொழிவும், ஐந்து அரிய நூல்கள் வெளியீட்டு விழாவும் முறையே 2, 3-4-1978 ஆம் நாட்களில் மறைமலையடிகள் நூல் நிலையத்திலுள்ள வள்ளலார் திருவருள் மண்டபத்தில் மிகச் சிறப்புற நடைபெற்றன.

முதல் நாள் நிகழ்ச்சியில் திருமுறைச் சொற்பொழிவு நூல், 'ஊமைக்குயில்' நாடக நூல், 'மதுரை மீனுட்சியம்மை சந்தத் திருவடி மாலை' ஆகிய மூன்று நூல்கள் வெளியிடப் பெற்றன. அவை தொடர்பான செய்திகள் வருமாறு:

நிகழ்ச்சி நிரலில் குறித்திருந்தபடி 6 மணியளவில் அமைச்சர் மாண்புமிகு அரங்கநாயகம் அவர்கள் வருகை தந்தார்கள். கழக ஆட்சியாளர், பொது மேலாளர், மறைமலையடிகள் நூலகத்தின் நூலகர் ஆகியோர் அமைச்சர் அவர்களை வரவேற்று நூற்காட்சியினைச் சுற்றிக் காட்டினுர்கள். பின்னர் வள்ளலார் திருவருள் மண்டபத்தில் இறைவணக்கத்துக்குப் பின் கழக ஆட்சியாளர் தாமரைச் செல்வர் உயர்திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் அனைவரையும் வரவேற்று உரை நிகழ்த்திஞர்கள். அவ்வுரையின் சுருக்கம் வருமாறு:

வரவேற்புரை:

முதல் நாள் நூல் வெளியீட்டு விழாவில் கழக ஆட்சியாளர் வ. சுப்பையா பிள்ளை நிகழ்த்திய வரவேற்புரை:

இன்றைய நூல் வெளியீட்டு விழாவுக்குத் தலைமை தாங்கிப் பரிசு வழங்க அமர்ந்திருக்கும் தமிழக அரசு கல்வி அமைச்சர் மாண்புமிகு செ. அரங்கநாயகம் அவர்களே! பரிசு நூலை வெளியிட அமர்ந்திருக்கும் அறநிலைய ஆணையர் மதிப்புமிகு எம். கே. பாலசுப்பிர மணியம் அவர்களே! பாராட்டுரை வழங்க அமர்ந்திருக்கும் உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவன இயக்குநர்

திருவாளர் டாக்டர் ச. வே. சுப்பிரமணியம் அவர்களே! பரிசுச் சொற்பொழிவு நூல் ஆசிரியர் பேருரையாளர் கு. சுந்தரமூர்த்தியவர்களே! சம்பந்தர் வரலாற்றாராய்ச்சி எழுதிப் பரிசு பெற்றவரும், இன்று வெளியிடப் பெறும் ஊமைக்குயில் நாடக ஆசிரியரும் ஆகிய டாக்டர் சொ. சிங்காரவேலனார் அவர்களே! இவ் விழாவுக்கு வந்திருக்கும் மெய்யன்பர்களே! உங்களெல்லாரையும் வருக வென்று பணிவன்புடன் வரவேற்கின்றேன்.

இன்று வெளியிடப் பெறும் 'சுந்தரர் வரலாற்றாராய்ச்சி' என்ற நூலும், சோழவந்தான் முதுபெரும்புலவர் அரசஞ் சண்முகனார் இயற்றியருளிய 'மதுரை மீனாட்சியம்மை சந்தத் திருவடிமாலை' என்ற நூலும், திரு. சிங்காரவேலனார் இயற்றிய 'ஊமைக்குயில்' என்ற நாடக நூலும் இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழை உணர்த்துகின்றன. அதேபோல நாளை வெளியிடப் பெறும் சிலப்பதிகாரம் ஆங்கிலம் முத்தமிழ்க் காப்பியம் ஆதலால் இரண்டு நாள் விழாக்களும் முத்தமிழை உணர்த்துவனவாக அமைந்திருப்பது தெய்விகப் பொருத்தமாகும்.

1968 இல் கழகவழி நடைபெற்ற திருவள்ளுவர் விழாவில் இராவ்பகதூர் தணிகைமணி செங்கல்வராய பிள்ளை அவர்கள் பெயரில் திருமுறைச் சொற்பொழிவுப் பரிசும், திருக்குறள் தெளிவுரை எழுதிப் பெரும்புகழ் பெற்ற டாக்டர் மு. வரதராசனுரவர்கள் பெயரில் திருக்குறட் சொற்பொழிவுப் பரிசும் ஏற்படுத்தப்பட்டன. டாக்டர் தணிகை மணியவர்கள் பன்னிரு திருமுறைகட்கும் ஒளிநெறியும், ஒளிநெறிக் கட்டுரைகளும் எழுதத் தொடங்கி முதல் 9 திருமுறைகட்கும் ஒரு பல்கலைக் கழகம் செய்ய முடியாத அரிய பெரிய வேலையாயிருப்பினும் தாம் ஒருவரே எழுதியுள்ளனர். அவற்றைக் கழகம் ஏற்று அச்சிடாவிடில் அவை அச்சிட்டு வெளியிடப் பெறுமல் போயிருக்கும். அவர்கள் செய்த இவ்வரும் பெரும் பணியை உலகறியும் பொருட்டு 1969 செப்டம்பர் முதல் நாள் தணிகைமணி அவர்கட்கு மதுரைப் பல்கலைக் கழகவழி 'டாக்டர்' (டி. லிட்.) பட்டம் வழங்குப்படி கழக ஆட்சியாளர் செய்த முயற்சி வெற்றியளித்தது. அப்போது அவர்கட்கு அகவை 87 ஆகும். நாளை நடைபெறப் போகும் விழாவுக்கும் வரும்படி உங்களெல்லாரையும் பணிவன்புடன் வேண்டிக் கொள்ளுகிறேன்.

அறிமுகவுரை ஆற்ற வேண்டிய திருவாளர் டாக்டர் சி. பாலசுப்பிரமணியம் அவர்கள் தமது குடும்பத்தில் ஏற்பட்ட எதிர்பாராத துன்பியல் நிகழ்ச்சியினுல் வரக்கூடவில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தலைமை உரை :

தமிழகக் கல்வி அமைச்சர் மாண்புமிகு செ. அரங்கநாயகம், எம் ஏ., பி. டி., பி எல். அவர்கள் ஆற்றிய தலைமை உரையின் சுருக்கம் :

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் தமிழ் ஆட்சியிலே யும், தமிழை வளர்ப்பதிலேயும் பல்லாண்டுகளாகத் தன்னை ஈடு படுத்திக் கொண்டு சேவை செய்து வருவதைத் தமிழகத்தி லுள்ள எல்லோரும் அறிவார்கள். திரு. சுப்பையாபிள்ளை அவர்களுடைய சேவை தொடரவேண்டும் என்ற நல்ல கருத் தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

புத்தகங்களை வெளியிட்டுக்கொண்டிருக்கிற இந்த சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்கு மக்களிடையே நல்லாதரவு இருக்கிறது. அது மேன்மேலும் வளரவேண்டும். இத்தகைய சேவையில் அவர்கள் எத்தகைய லாப நட்டமும் கருதாது தமிழுக் கும் சைவத்திற்கும் செய்யும் பெரும் சேவையாகக் கருதிச்செய்து கொண்டிருக்கிருர்கள். அதற்கு நல்ல வரவேற்பும் இருக்கிறது. அந்த அடிப்படையிலேதான் சுந்தரர் வரலாற்ருராய்ச்சி என்ற நூலை இங்கே வெளியிட்டிருக்கிருர்கள். ஆராய்ச்சி நூல்களில் இதுபோன்ற இலக்கிய நூல்கள் வெளியிடப் பெறுவது வர வேற்கப்படக் கூடியதுதான். இவற்றையெல்லாம் படிக்கக் கூடிய அளவிற்கு மாணவர்களிடையிலும் பொதுமக்களிடை யிலும் தமிழ் அறிவு வளரவேண்டும்.

அடுத்து மனேன்மணியத்துக்குப் பிறகு அது போன்ற ஒரு நாடக நூல் இல்லை என்ற காரணத்துக்காக 'ஊமைக் குயில்' என்னும் நாடக நூல் வெளியிடப்பட்டுள்ளது. பழைய நூல் களையே போற்றிக் கொண்டிருப்பதை விடுத்து, புதிய இலக்கியங் களை வரவேற்கும் மனநிலை என்றைக்கு நமக்கு ஏற்படுகிறதோ அன்றைக்குத்தான் நாம் சமுதாயத்தில் வளரத் தகுதி உடைய வர்களாவோம். புதிய இலக்கியங்களைப் படைக்கின்ற இலக்கியக் கர்த்தர்களுக்கு அன்பான ஆதரவினைத் தர நாங்கள் எந்த நேரத்திலும் கடமைப்பட்டவர்களாக இருக்கிருேம். இந்த ஆசிரியர்களைப் பாராட்டுகின்ற வாய்ப்பினைத் தந்தவர்களுக்கு நன்றி தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

பரிசு நூல் வெளியீடு :

சுந்தரர் வரலாற்ருராய்ச்சி நூலினை வெளியிட்டு, இந்து அறநிலைய ஆணையர் உயர்திரு எம். கே. பாலசுப்பிரமணியம் ஐ.ஏ.எஸ். அவர்கள் ஆற்றிய சொற்பொழிவின் சுருக்கம் :

"சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் 58 ஆண்டுகளாகப் பிரதிபலன் எதிர்பார்க்காமல், தீவிரமாகவும் ஆடம்பரமில்லாமலும் மிக அழகாகச் செயல்பட்டுக்கொண்டு வருகின்றது. இதற்கெல்லாம் ஆணிவேராக இருக்கக்கூடியவர் பிள்ளையவர்கள்தாம். எதையும் சாதிக்கக்கூடிய ஆற்றல் சுப்பையா பிள்ளை அவர்களுடையது. அவர்கள் எதிர்பார்க்கின்ற அளவு அதிகம். அதைத் திருப்திப் படுத்துகின்ற நம்முடைய நிலை குறைவு. ஆயினும் இந்த 80 ஆண்டு இளைஞர், தமக்கென ஒன்றும் கொள்ளாமல் சிறப்பாகப் பணியாற்றி வருகின்ற ஒரு நிலைமையைப் பார்க்கின்றபொழுதும், அதே நேரத்தில் நல்ல இரண்டு இளைஞர்களை உருவாக்கி வைத்திருப்பதைப் பார்க்கின்ற போதும் அவர்களுக்குப் போதிய ஆதரவைக் கொடுக்க வேண்டும் கொடுப்போம் என்பதையும் இங்கே நாம் சொல்லிக் கொள்ளுகிறோம். சுந்தரர் வரலாற்று ஆராய்ச்சி நூலினை எழுதிய ஆசிரியர் அவர்களைப் பாராட்டுகிறோம்."

பரிசுச் சொற்பொழிவு :

பேராசிரியர் கு. சுந்தரமூர்த்தி அவர்கள் ஆற்றிய வரலாற்றுச் சொற்பொழிவின் சுருக்கம்.

"எத்தனையோ அரிய நூல்களை வெளியிட்டிருக்கும் எண்பது ஆண்டு இளைஞராக வீற்றிருக்கும் தாமரைச் செல்வர் அவர்களுக்கு என் வணக்கத்தையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் ஆணிவேராக, அச்சாணியாக இருக்கின்ற அருமை ஐயா அவர்களைப் பல முறைகளில் நாம் பாராட்டவேண்டும் தமிழ் நாட்டில் 1670 க்கு மேற்பட்ட நூல்களைத் தொடர்ந்து வெளியிட்டுவரும் நிறுவனம் நம்முடைய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் ஒன்றே என்றால் மிகையாகாது. ஒரு தமிழன் இன்னொரு தமிழனைப் பாராட்டுவதில் மிகத் தயக்கமுடையவன். மற்றொன்று, ஒரு வரை அளவு கடந்து பாராட்டுவதனால் தலை நிமிர்ந்து போவது. இந்த இரண்டு காரணங்களால் தமிழன் நிலை கீழே போய்க் கொண்டிருக்கிறது. ஐயா அவர்களுக்குப் பணமே குறிக்கோள் என்று சொன்னால் வெறும் நோட்ஸ் வெளியிடலாம். இப்போது தேவை அதுதான். எம். ஏ. க்குப் பத்தாண்டு வினாத்தாள்கள். பி. லிட்டுக்குப் பத்தாண்டு வினாத்தாள்கள் என்று இவற்றை வெளியிட்டால் நிச்சயமாக விரைவில் விலைபோகும். இவர்கள் வெளியிட்டிருக்கும் இலக்கண நூல்கள் பல ஆண்டுகள் கடந்து

தான் விலை போகின்றன. அதற்கெல்லாம் ஈடுகொடுத்து நல்ல நூல்களை வெளியிட்டுவரும் ஒரே நிறுவனம் கழகம் என்பதை நாம் மறக்க முடியாது. ஐயா அவர்கள் இல்லையென்ருல் இத் துணை நூல்கள்தாம் எங்கே? இத்துணை இலக்கியங்கள்தாம் எங்கே? 'செந்தமிழ்ச் செல்வி' இதழ் எங்கே? எதுவுமே இல்லை.

மேலும், அவர்கள் இரண்டு செல்வங்களை வளர்த்திருக் கிருர்கள். அதைச் சொல்லத்தான் வேண்டியிருக்கிறது. பல நிறு வனங்களிலே தனக்குப் பின்னே நடக்காமல் இருப்பது பற்றியே நினைக்கிருர்கள். ஆனுல் ஐயா அவர்கள் தமக்குப் பிறகும் தமது பணி நடைபெறவேண்டும் என்பதை நெறிப்படுத்தி யிருக்கிருர்களே அதற்கு என்னுடைய வணக்கத்தையும் நன்றி யையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இரா. கலியாண சுந்தரம் அவர்களும் இரா. முத்துக்குமாரசாமி அவர்களும் நெறி யோடும் மாண்போடும் இக் கழகத்தை நடத்தி வரவேண்டும். அதை நாம் பார்க்க வேண்டும் என்பதைக் கூறிக்கொண்டு, இந்தச் சுந்தரர் வரலாற்றினை இறைவன் அருள் உணர்த்து கின்ற எண்ணங்கள் அளவில் திருவருள்வழி நின்று செய்துள் ளேன் என்பதையும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

ஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகியோர் சென்ற பாதை கரடு முரடானது. சுந்தரர் சென்ற பாதை 'சிமெண்டு ரோடு' போன்றது. ஆகவே, சுந்தரருடைய காலம் பொற்காலம் என்பேன். சுந்தரர் வரலாறு தனித்தன்மை வாய்ந்தது.

'திருமுறைகளை ஆண்டுக்கு ஒருமுறையேனும் திருக்கோயில் களில் சாற்றுதல் வேண்டும். சாற்றப்படுமானுல் தமிழும் வாழும், அதை விண்ணப்பிக்கும் ஓதுவார் மூர்த்திகளுடைய வாழ்வும் வாழும்' என்பதைத் தெரிவித்துக் கொண்டு வேகந் தடுத்தாண்ட வேந்தராகிய ஐயா வ. சு. அவர்களுக்கு என்னு டைய வணக்கத்தையும் நன்றியையும் தெரிவித்துக்கொண்டு, என்னைப் பாராட்டிப் பேசிய பேராசிரியர்கட்கும் பெரியோர் கட்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

பாராட்டுரை:

டாக்டர் ச. வே. சுப்பிரமணியம் எம்.ஏ., பி.எச்.டி., அவர்களின் பாராட்டுரைச் சுருக்கம் :

உயிர்க் கல்விக்கு அடிப்படையாக அமைந்த சமயக் கல்வி யிலே சிறந்த பேராசிரியர் சுந்தரமூர்த்தி அவர்கள் ஏறத்தாழ இருபது நூல்கட்குமேல் எழுதியிருக்கிருர்கள். தொல்காப்பியத்

திற்கு உரை எழுதியிருக்கிறார்கள். இந்த வரலாற்றாராய்ச்சியில் சுந்தரர் காலத்தைப் பற்றிக் கல்வெட்டுக்கள் என்ன கூறுகின்றன, ஏனைய இலக்கியங்கள் என்ன கூறுகின்றன என்பனவனைத்தையும் விளக்கிச் சுந்தரர் காலம் 8 ஆம் நூற்றாண்டின் இறுதியும் 9 ஆம் நூற்றாண்டின் தொடக்கமும் ஆகும் என்பதை நிறுவிக் காட்டியுள்ளார்கள். அவர்கள் சுந்தரர் வரலாற்றைப் பல கோணங்களில் ஆராய்ந்திருக்கிறார்கள். இம் மாதிரி ஒரு நூலை உருவாக்குவதற்கு பேராசிரியர் சுந்தர மூர்த்தி அவர்கள் எடுத்த முயற்சி பாராட்டத் தக்கது. சுந்தரமூர்த்தி அவர்கள் இன்னும் ஐந்தாண்டுகளில் டாக்டர் சுந்தரமூர்த்தி ஆகிவிடுவார்கள். ஆக வேண்டும் என்பது என்னுடைய ஆசை.

அடுத்த படியாக நாடகம். இந்த 'ஊமைக்குயில்' நாடகத்தில் இளங்கோவடிகளைப் பார்க்கிறோம்; சங்க இலக்கியத்தைப் பார்க்கிறோம். இந்த நூலே ஒரு முத்தமிழ்தான். இதில் வரும் முன்னிலைப் பரவல், படர்க்கைப் பரவல் மிக இனிமையானவை. இதிலுள்ள உவமைகள், இதிலுள்ள பழமொழிகள் வள்ளுவர் கூறுவது போன்று நவில்தொறும் நூல்நயம் பயப்பன. இந் நாடகம் படிக்கவும் முடியும் நடிக்கவும் முடியும். மிகச் சிறந்த இந்த நாடகத்தைத் தந்த டாக்டர் சிங்காரவேலனாரைப் பாராட்டுகிறேன். அவர் மிகச் சிறந்த ஆசிரியர்.

இந்த இரண்டு நூல்களையும் அறிமுகப் படுத்துவதில் பெருமைப் படுகிறேன். இந்த வாய்ப்பினைத் தந்த சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்கு எனது பணிவான — அடக்கமான நன்றி. 80 ஆண்டு இளைஞர் சுப்பையாபிள்ளை அவர்களைப் பார்த்தால் எனக்கு அடிக்கடி உற்சாகம் வருவதுண்டு. இடைவிடாது முயன்று மிகப் பெரிய காரியங்களைச் சாதிக்கின்ற ஆற்றல் அவர்களுக்குத்தான் உண்டு. பிற எந்தப் பதிப்பகமும் செய்யாத பணிகளை இவர்கள் செய்திருக்கிறார்கள். அப்படிப்பட்ட அவர்களைப் பாராட்டுகிறேன்.

நன்றியுரை :

செஞ்சொற் கொண்டல் டாக்டர் சொ. சிங்காரவேலன் அவர்கள் ஆற்றிய நன்றியுரையின் சுருக்கம்:

நன்றி செலுத்துவதென்றால் யாருக்கு யார் நன்றி செலுத்துவது? யார்யார்க்கு நன்றிசெலுத்துவது? என்று தெரியவில்லை. முதலில் பேசிய தாமரைச் செல்வர் அவர்கள் உணர்ச்சி வசப்பட்டுப் பேசினார்கள். முதலில் அவர்களுக்கு நன்றி செலுத்த வேண்டும். அப்படி அவர்களுக்கு நன்றி செலுத்துவதென்றால்,

அவர்கள் தொடங்கியிருக்கிற சிற்றிலக்கியப் பாதுகாப்புத் திட்டத்தில் சேரவேண்டும். செந்தமிழ்ச் செல்விக்குக் குறைந்த அளவில் நண்பர்களையாவது ஆயுள் சந்தாதார ராகவோ, ஆண்டுச் சந்தாதார ராகவோ சேகரிக்க வேண்டும். கழகப் புத்தகத்தை எல்லோரும் வைத்திருக்கவேண்டும் தமிழாசிரியர் வீட்டிலே மறைமலையடிகள் நூல்கள் எல்லாம் இருக்கவேண்டும். இப்படியெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாகச் செய்தால் அதுவே அவர்கட்கு நாம் செலுத்தும் நன்றியாகும்.

அடுத்துப் பேராசிரியர் டாக்டர் ச. வே. சுப்பிரமணியம் அவர்கள் இங்கு உணர்ச்சி ததும்பப் பேசினார்கள். நீண்ட நெடுங்காலமாகக் கல்வித் துறையில் ஈடுபட்டிருக்கின்ற அவர்கள் தமது பாராட்டுரையிலே, இந்த நாட்டுக் கல்வித் துறையிலே ஏற்பட வேண்டிய சீர்திருத்தங்களைச் சுட்டிக் காட்டினார்கள். பணிவு என்பது மாணவர் உலகத்தை விட்டுச் சென்று கொண்டிருக்கிறது என்று வருத்தப் பட்டார்கள். இங்குக் கூடியிருப்பவர்கள் அத்தனை பேரும் கல்வித் துறையிலே ஈடுபட்டிருப்பதனாலே, இதிலே நம்முடைய பங்கு என்ன என்று எண்ணிப் பார்க்கும் உரையாக அது இருந்தது. எனவே அவர்கட்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன். மேலும் அவர்கள் இங்கு இசை வளத்தோடு பாடினார்கள். அவர்கள் என்னுடைய இந்தச் சிறிய படைப்பிலிருந்து சில வரிகளைப் பாடிக் காட்டிய போது, நான் உண்மையிலேயே புல்லரித்துப் போனேன். அதற்காகத் தனிப்பட்ட முறையிலும் நூலாசிரியன் என்ற முறையிலும் அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அடுத்து, நம்முடைய அமைச்சர் அரங்கநாயகம் அவர்கள் இங்கு அடுக்கி வைக்கப்பட்டிருந்த புத்தகங்களையெல்லாம் பொறுமையாகப் பார்த்தார்கள். அவர்கள் பல விழாக்களுக்கிடையே இந்த விழாவுக்கும் வந்து கழகத்தை வாழ்த்தியிருக்கிறார்கள். அந்த வாழ்த்துக்களுக்கு நல்ல பயன் விளையும் என்று நம்புகிறேன்.

இனி, ஆணையர் அவர்கள் மிக எளிமையானவர்கள். அவர்கள் தம் துறைக்கு ஏற்ற பண்புடன் பேசினார்கள். அவர்களுடைய பேச்சுக்கு நாம் நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறோம்.

அடுத்து, சில ஆண்டுகளுக்கு முன்னால் மனோன்மணீயத்தை விட்டால் வேறு நாடகங்கள் இல்லையே, சுந்தரம் பிள்ளை

வினுடைய வழியைப் பின்பற்றி நாம் செய்யக் கூடிய கடமை என்ன செய்திருக்கிறோம். அவ் வழியைப் பின்பற்ற வேண்டிய எண்ணத்தைத் தாமரைச் செல்வர் அவர்கள் என்னிடத்தில் தூண்டினார்கள். எனவே அவர்கட்கும், மற்றும் இங்கு வந்திருந்து மூன்றுமணி நேரத்திற்கு மேல் பொறுமையாக இருந்து கேட்ட உங்கள் அனைவருக்கும் என்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

## ஐந்து அரிய நூல்கள் வெளியீட்டு விழா 2 ஆம் நாள் நிகழ்ச்சிகள்

கழகத்தின் 5 அரிய நூல்கள் வெளியீட்டு விழாவின் 2 ஆம் நாள் நிகழ்ச்சிகள் 3-4-78 இல் நடைபெற்றன. அவ் விழாவில் சிலப்பதிகாரம் (ஆங்கில மொழிபெயர்ப்பு), 'தமிழில் எழுதுவோம்' ஆகிய நூல்கள் வெளியிடப் பெற்றன. நிகழ்ச்சிகள் வருமாறு:

வரவேற்புரை :

கழக ஆட்சியாளர் தாமரைச் செல்வர் வ. சுப்பையா பிள்ளை அவர்கள் அனைவரையும் வரவேற்றுப் பேசியதன் சுருக்கம் :

"இங்கு இந்த விழாவுக்குத் தலைமை தாங்க எழுந்தருளி யிருக்கும் மேலவைத் துணைத் தலைவர், என் அன்பிற்குரிய சிலம்புச் செல்வர் ம. பொ. சிவஞானம் அவர்களே, சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் மதிப்புக்குரிய மால்கம் ஆதி சேஷையா அவர்களே,

நேற்று இங்கு நடந்த விழா ஒரு முத்தமிழ் விழாப் போலவே நடைபெற்றது. சுந்தரர் வரலாற்றாராய்ச்சி நூல், ஊமைக்குயில் என்ற நாடக நூல், முதுபெரும் புலவர் அரசஞ் சண்முகனார் இயற்றிய மதுரை மீனாட்சியம்மை சந்தத் திருவடி மாலை ஆகிய மூன்று நூல்கள் வெளியிடப் பெற்றன.

இன்று சிலப்பதிகாரம் ஆங்கில மொழி பெயர்ப்புநூல் வெளியிடப்பட விருக்கிறது. இந் நூலின் ஆசிரியர் சென்னைப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியராக இருந்தவர்கள். பல நூல்களை எழுதியிருக்கிறார்கள். அவர்களுடைய திருமகனார் இரா. சீனிவாசன், பி.இ., அவர்கள் வழியாக இந்த நூல் எங்களுக்குக் கிடைத்து இப்பொழுது கழகத்தின் வழியாக வெளியிடப் பெறுகிறது என்பதை மகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இங்கு அறிமுகவுரை வழங்க டாக்டர் ஔவை நடராசன் அவர்களும், பாராட்டுரை வழங்கத் திருமிகு அ. மு. சுவாமி நாதன், ஐ. ஏ. எஸ். அவர்களும், டாக்டர் மெ. சுந்தரம் அவர்களும் திருமிகு சிலம்பொலி செல்லப்பன் அவர்களும் வந்திருக்கிறார்கள். ஆட்சிச்சொற் காவலர் அவர்களும் வந்திருக்கிறார்கள், ஆகவே இந்த விழா மிகச் சிறப்பாக நடைபெறும் என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

சிலப்பதிகாரம் ஆங்கில மொழி பெயர்ப்பு நூலை வெளியிட வாய்ப்பளித்த நண்பர் திரு. இரா. சீனிவாசன் அவர்கட்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். விழாத் தலைவரவர்கள் இந்த விழாவினைச் சிறப்பாக நடத்தித்தருமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்.

தலைமையுரை :

விழாவிற்குத் தலைமைதாங்கிய சிலம்புச் செல்வர் ம. பொ. சிவஞானம் அவர்கள் ஆற்றிய உரையின் சுருக்கம் :

"நாம் இலக்கியத் துறையில் தமிழ் வளர சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தை நம்பியிருப்பதுபோல் ஆட்சித்துறையில் ஆட்சித்துறைத் தமிழ் வளர ஆட்சியைத்தான் நம்பியிருக்கிறோம். சிலப்பதிகார ஆங்கில மொழிபெயர்ப்பையும், தமிழில் எழுதுவோம் என்ற நூலையும் தொடங்கி வைப்பது இந்த ஆட்சி இன்னமும் ஆங்கிலத்தை விட்டுவிடவில்லை என்பதையும், ஆங்கிலத்தைப் பிடித்திருப்பது தமிழுக்காகத்தான் என்பதையும் எடுத்துக் காட்டுகிறது. ஆங்கிலத்தில் சிலப்பதிகாரம்தான் வெளியிடப்படுகிறதேயன்றி ஷேக்ஸ்பியர் வெளியிடப்படவில்லை.

ஆட்சியிலிருப்போருக்குத் தமிழ்ப் பற்று இருந்தாலுங்கூட பயிற்சிக்கு இடர்ப்பாடு வரத்தான் செய்கிறது. ஆனால், தமிழால் முடிந்தாக வேண்டும் என்ற முடிவுக்கு வந்துவிட்டால் எல்லாம் சரியாகப்போய்விடும். ஆளுவோர்க்குத் தமிழ்ப்பற்று உண்டு என்பது உறுதிப் படுத்தப்பட்டு விட்டால், ஆட்சியினுடைய உறுப்புக்கள் தாமாக இயங்குகின்றன.

இந்த நூலை ஆளுக்கொன்று வாங்கிக்கொண்டு போய் படித்துப் பார்த்தால்தான் தமிழாக்கத்தில் அரசுக்குள்ள இடர்ப்பாடு தெரியும், என்று சொல்லி இந்த விழாவைத் துவக்கி வைக்குமாறு அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

நம்முடைய துணைவேந்தர் அவர்கள் வந்த பிறகுதான் சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு நெடுங்காலமாக இல்லா

திருந்த தமிழ்ப் பெயர்ப்பலகை போடப்பட்டது. உலகத் தமிழ் மாநாடு பிரான்சில் நடைபெற்றபோது அவர்கள்தாம் பொறுப் பெடுத்துக்கொண்டு பணவுதவியும் செய்தார்கள். அப்படிப்பட்ட வர்கள்தாம் இப்போது சிலப்பதிகார நூலை வெளியிடுவார்கள்.

தமிழில் நூல்களையே வெளியிட முடியாமலிருந்த 40 ஆண்டு களுக்கு முந்திய காலத்தில், சிலப்பதிகாரத்தை ஆங்கிலத்தில் வெளியிட்ட இராமச்சந்திர தீட்சிதருக்கு ஒவ்வொரு தமிழனும் தலைமுறைக்குத் தலைமுறை நன்றி செலுத்தவேண்டும்.

சுப்பையாபிள்ளையவர்கள் இந்தப் பதிப்பகத்தைத் தொடங் கியபோது இலக்கியங்களை வெளியிடப் பதிப்பகங்களே கிடையா. அப்படிப்பட்ட காலத்தில் அவற்றை வெளியிட்டார் என்றால் அவருக்கு என்ன சிறப்புச் செய்தாலும் தகும். அரசுகூட என்றாவது ஒருநாள் அவருக்கு ஒரு பெருஞ் சிறப்புச் செய்யு மானால் அதற்குப் போட்டியாக யாரும் வரமாட்டார்கள். எனவே, இத்தகைய அரிய நூல்களை வெளியிட்ட சுப்பையா பிள்ளை அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்ளு கிறேன்.

துவக்கவுரை

தமிழகச் செய்தி, சுற்றுலாத் துறைகளின் அமைச்சர் மாண்புமிகு இராம வீரப்பன் அவர்கள் ஆற்றிய துவக்கவுரையின் சுருக்கம் :

"சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகப் பெரியவர் திரு. சுப்பையா பிள்ளை அவர்களின் முயற்சியினாலே சிலப்பதிகாரத் தின் ஆங்கில மொழி பெயர்ப்பு நூலையும் 'தமிழில் எழுதுவோம்' என்ற நம்பிக்கை யூட்டுகின்ற ஒரு நூலையும் வெளியிடும் விழா வினைத் துவக்கி வைக்கும் பணியினை எனக்களித்திருக்கிறார்கள்.

தமிழ்ப் புலமையிலே வறியவனான என்னை இம்மா மன்றத் திலே அனுப்பி, இவர் அந்தத் தகுதியைப் பெற்றுக் கொள்ளட் டும் என்று கருதியே போலும் திரு. பிள்ளையவர்கள் இந்தப் பணியினை எனக்களித்திருக்கிறார்கள் என்று கருதுகிறேன்.

அவர் ஆற்றல் மிக்கவர்; தமிழ் வாழ்வதற்காகவே தம்மை ஒப்படைத்துக் கொண்டிருப்பவர். இப் பணியில் அரசாங்க முத்திரையாக இந்த அமைச்சர் பயன்பட்டும் என்று கருதி என்னைச் சுப்பையாபிள்ளை யவர்கள் பயன்படுத்திக் கொண்டிருக் கிறார்கள் என்று கருதுகிறேன். இந்த வாய்ப்பினைத் தந்த அன்னாருக்கு முதற்கண் என்னுடைய வணக்கத்தைத் தெரிவித் துக் கொள்ளுகிறேன்.

"தமிழில் எழுதுவோம்" என்று ஒரு புத்தகம் பிரஞ்சு நாட்டிலோ இங்கிலாந்திலோ, ரஷிய நாட்டிலோ வெளியிடப் படவில்லை. துர்ப்பாக்கியம் பிடித்த தமிழ் நாட்டிலே 1978 ஆம் ஆண்டில் வெளியிடப்படுகிறது! 1800 ஆண்டுகட்குமுன் சிலப்பதி காரத்தையும், 2ஆயிரம் ஆண்டுகட்குமுன் திருக்குறளையும், மூவாயிரம் நாலாயிரம் ஆண்டுகளுக்குமுன் தொல்காப்பியத்தையும் பெற்றிருக்கும் இந்த நாட்டில், இப்படித் 'தமிழில் எழுதுவோம்" என்றொரு நூலை வெளியிடவேண்டிய நிலை இருப்பது பற்றி நாம் வருந்துவதைத் தவிர வேறு என்ன செய்யமுடியும்.

நம்முடைய காலத்திலாவது எல்லாத் துறைகளிலும் தமிழைப் புகுத்துவோம் என்ற உணர்வை நாம் பெற வேண்டும். அதற்கு உறுதி எடுத்துக்கொள்ள வேண்டும்.

தமிழில்தான் எழுதவேண்டுமா என்று கேட்கிற துணிவுள்ள அதிகாரி, அலுவலர், அல்லது எந்தத் துறையிலே யார் இருந்தாலும், அவர்கள் இங்கே, தமிழ் நாட்டில் அனுமதிக்கப் படுவார்களா என்ற கேள்வியை வைத்து அதற்கான விடையைத் தமிழ்ச் சமுதாயந்தான் தரவேண்டும்.

ஆங்கிலமும் வேண்டும்; ஆனால், அது தமிழுக்குப் பிறகு தான். ஆங்கிலம் வேண்டும், ஆனால் தமிழுக்குத்தான் முதலிடம்.

ஆங்கிலம் தெரியாதவர்கள்தாம் தமிழுக்காக வாதாடுகிறார்கள் என்று சொல்லப்படுமானால் அப்படிப்பட்டவர்கள் தொகை என்ன? தமிழ் தெரியாதவர்கள்தாம் ஆங்கிலம் வேண்டும் என்கிறார்கள் என்றால், அப்படிப்பட்டவர்கள் தொகை என்ன? என்பதையெல்லாம் எண்ணிப் பார்க்கவேண்டும். எனவே, தமிழிலே பேசுவதும் எழுதுவதும் யாருக்கும் மாறுபட்ட கருத்தன்று என்பதைத் தெரிவித்துக்கொண்டு, நன்றி கூறி இந்த விழாவினைத் துவக்கிவைக்கிறேன்.

சிலப்பதிகாரம் - நூல் வெளியிடல் :

*சிலப்பதிகாரம் - ஆங்கில மொழிபெயர்ப்பு நூலினை வெளியிட்டுச் சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் மால்கம் ஆதிசேஷையா அவர்கள் ஆற்றிய உரையின் சுருக்கம் :*

இந்தச் சிலப்பதிகார ஆங்கில நூலை வெளியிடும் வாய்ப்பைத் தந்த சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்க்கு நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இதை வெளியிடுவதால் தமிழ் நாட்டுக்கு மட்டுமல்ல; உலகத்திற்கே இந்நாள் ஓர் அருமையான நாளாகும். நாங்கள் 120 நாடுகள் சேர்ந்து திருக்குறளையும் இராமாயணத்தையும், ஆங்கிலத்திலும், பிரஞ்சிலும், ரஷிய மொழியிலும், மற்ற மொழிகளிலும் வெளியிட ஏற்பாடு செய்திருக்கிறோம்.

இப்போது சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் மூலம் திரு. சுப்பையாபிள்ளை அவர்கள் ஒருவரே தம்முடைய வல்லமையினால் - தம்முடைய முயற்சியினால் 120 நாடுகள் செய்ததை இவர் ஒருவரே செய்திருக்கிறார். இவரை நாம் எல்லோரும் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம், பாராட்டுகிறோம்.

சிலப்பதிகாரத்தில் காவேரியைப் பற்றியும் புகாரைப் பற்றியும் வரும் பகுதிகள் இருக்கின்றன. அப் பகுதிகளில் தமிழ் நாட்டின் பூகோளம் பற்றி வருகிறது; பொருளாதாரம் பற்றி வருகிறது; ஆடை அணிகள் நாகரிகம் ஆகியவை பற்றியெல்லாம் வருகின்றன.

இப்படிப்பட்ட அருமையான நூலை ஆங்கிலத்தில் தந்த இராமச்சந்திர தீட்சிதருக்கும் அவருடைய குடும்பத்தார்க்கும் நமது நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

சென்னைப் பல்கலைக் கழகத்துக் கல்லூரிகளில் 10 சதவிகித மாணவர்கள்தாம் தமிழில் பாடங்களைப் படிக்கிறார்கள். 90 சதவிகிதம் மாணவர்கள் ஆங்கிலத்தில் படிக்கிறார்கள். இந்த விகிதத்தை எப்படி மாற்றி அமைப்பது என்பதற்குத் திட்டம் போட்டிருக்கிறோம். எம். ஏ. பட்டப் படிப்பைத் தமிழில் படிக்கச் செய்ய நாங்கள் உறுதி செய்திருக்கிறோம். அறிவியல், பொருளாதாரம் ஆகியவற்றைத் தமிழில் கொண்டு வரப்போகிறோம்.

அரசு தமிழில் படித்துப் பட்டம் பெற்றவர்களுக்கு முதலிடம் கொடுத்தால் எங்களுடைய பணி சிறப்புற நடக்கும். தமிழ் வளரும். இதைத்தான் நான் கேட்டுக் கொள்ளுகிறேன்.

இந்தச் சிலப்பதிகாரத்தை எழுதிய தீட்சிதர் அவர்களுக்கு நம்முடைய நன்றியைத் தெரிவிதது இந்தப் பொன்னான நாளில் இதை வெளியிடுவதில் மகிழ்ச்சியடைகிறேன்.

அறிமுகவுரை :

நூல்களை அறிமுகப்படுத்தி டாக்டர் ஒளவை நடராசன் அவர்கள் ஆற்றிய சொற்பொழிவின் சுருக்கம் வருமாறு :

"நம்முடைய கழக ஆட்சியாளர் சுப்பையா பிள்ளையவர்கள், தம்முடைய தளர்ந்த வயதிலும், குரல்வளம் குன்றியிருக்கும் நிலையிலும் ஆர்வத்தோடு இங்குத் தம்முடைய வரவேற்புரையை நிகழ்த்தியிருக்கிருர்கள். நம்முடைய தமிழக அரசு தமிழ் நூல்களை மொழி பெயர்ப்பதற்கென்று ஒரு தொகையை ஒதுக்கி யிருக்கின்றது. ஆனல் அரசினர் ஒதுக்குவதற்கு முன்னுலேயே இந்த எண்ணத்தை நம்முடைய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் கடந்த 20 ஆண்டுகளாக நிறைவேற்றி வருகின்றது. அந்த வகையில் பேராசிரியர் இராமச்சந்திர தீட்சிதர் அவர்கள் எழுதிய சிலப்பதிகாரம் இன்று வெளியிடப் பெறுகிறது. திருக்குறளையும் அவர்கள் மொழி பெயர்த்திருக்கிருர்கள்.

சிலப்பதிகாரம் முழுமையும் மொழி பெயர்ப்பது என்பது எவ்வளவு அருமையானது என்பதை நாம் அறிவோம். உலகமெல்லாம் சுற்றிய பெரும்புகழ் வாய்ந்த நம்முடைய துணைவேந்தர் அவர்கள், சென்னைப் பல்கலைக் கழகத்தின் வழியாக சங்க இலக்கியங்களை யெல்லாம் வெளியிடுகின்ற அரும்பணியை அவர்களே மேற்கொள்ள வேண்டும். ஏனென்ருல் இதற்கு அரசை நாடுவதோ, தனியார் நிறுவனங்கள் இப் பணியை எடுத்துச் செய்வதோ மிகவும் அருமையாகும். சான்ருக நம்முடைய பிள்ளையவர்கள் கா. சு. பிள்ளை ஆராய்ச்சி மன்றம் என்ற ஒன்றைத் தொடங்கினுர்கள். சங்க இலக்கியங்களை யெல்லாம் ஆங்கிலப் படுத்த வேண்டும் என்ற அவாவினுல் குறுந்தொகை முழுவதையும் இளங்கண்ணன் அவர்களைக் கொண்டு மொழி பெயர்க்கச் செய்தார்கள். அதற்கு முன்பே Golden Anthology என்ற நூலை 3 பகுதிகளாக வெளியிட்டுள்ளார்கள். ஏ. வி. சுப்பிரமணியம் என்பவர் பதிற்றுப் பத்தை மொழியாக்கம் செய்தார்கள். டாக்டர் ஜி. யு போப் மொழி பெயர்த்த புறநானூற்றுப் பாடல்களைத் தொகுத்து The Heroic Poems என்ற பெயரில் கழகம் வெளியிட்டிருக்கிறது. J. M. நல்லசாமிப் பிள்ளை ஏராளமான இலக்கியங்களை மொழி பெயர்த்திருக்கின்ருர்கள். இங்ஙனம் மொழி பெயர்க்கப்பட்ட நூல்களெல்லாம் சிதறுண்டு கிடக்கின்றன. சங்க இலக்கியங்களெல்லாம் ஆங்கிலத்தில் காண ஒரு தொகுதி இல்லை.

உலகமெல்லாம் பரவி இருக்கின்ற நம்முடைய மொழி பெயர்ப்புக்களை யெல்லாம் ஒன்று சேர்த்துத் திரட்டுவதற்கு ஒரு தொடக்க வாய்ப்பாக இந்தச் சிலப்பதிகாரம் அமைந்திருக்கிறது.

நம்முடைய அண்ணா அவர்கள் அமெரிக்கா சென்றபோது கழகத்திற்கு வந்து போப் திருக்குறள் மொழிபெயர்ப்பை வாங்கிச் சென்றார்கள். இந்தத் திங்களிலே நம்முடைய அருமை முதல்வர் அமெரிக்கா செல்ல இருக்கிறார்கள். அப்பொழுது இந்தச் சிலப்பதிகார மொழிபெயர்ப்பையும் அமெரிக்காவுக்கு அனுப்புகிற பணியிலே நம்முடைய அமைச்சர் அவர்கள் ஒத்துழைப்பார்கள் என்று நம்புகிறேன்.

தீட்சிதர் அவர்கள் வரலாற்றுப் பேராசிரியர் ஆகையால் சிலப்பதிகாரத்தை வரையறை செய்து, இது 2 ஆம் நூற்றாண்டு நூல் என்று கால முறைப்படியும், வெள்ளிக்கிழமை என்று நாள் முறையும் வெளியிட்டிருக்கிறார்கள். இது புதுமை இல்லை. அண்மையில், கேரளத்திலிருந்து ஒரு நூல் வந்திருக்கிறது. இளங்கோவடிகளுக்கு இளங்கோவடிகள் என்ற பெயர் பொருந்தாது—குஞ்சன் குட்டி என்பதுதான் அவருடைய இயற்பெயர்—அவர் 11 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர்—ஆகவே 800 ஆண்டு கட்கு முற்பட்ட கதை அது; அதிலே இருப்பதெல்லாம் மொழி பெயர்ப்பு—என்றொரு ஆராய்ச்சி நூல் வெளிவந்திருக்கிறது. அந்த நூலுக்கு நடுவண் அரசு பரிசு கொடுத்திருக்கிறது என்பது குறிப்பிடத்தக்கது!

எனவே, சிலப்பதிகாரத்தைச் சிரழிக்க நினைப்பவர்க்கும் பரிசளிக்கப்படுகிறது என்பதை நினைக்கும்போது, சிலப்பதிகாரத்தின் செம்மை நலம் குன்றாமற் செய்யும் பணியை மேற்கொண்டிருக்கும் கழகத்தை நாம் உண்மையிலேயே பாராட்ட வேண்டும்.

அடுத்து, ஆட்சிமொழிக் காவலர் அவர்கள் எழுதிய 'தமிழில் எழுதுவோம்' என்ற நூலை இங்கே வெளியிட்டிருக்கிறார்கள். அதை நிதித்துறைத் துணைவர் உயர்திரு அ. மு. சுவாமிநாதன் அவர்கள் அறிமுகம் செய்ய வந்துள்ளார்கள். அவர்கள் 'இல்லை' என்று சொல்லாத மனம் படைத்தவர்கள். அவர்கள் 'தமிழில் எழுதுவோம்' என்று சொன்னால் மற்றத் துறைகள் தாமாகவே செய்யும்.

நாம் இந்த நூலை வெளியிட்டுவிட்டால் மட்டும் போதாது. ஐயாயிரம் அலுவலகங்கள் இருக்கின்றன. ஆளுக்கு 2 படிகள் என்று வாங்குகிற பணியைச செய்தால் வெளியிட்டவர்களுக்கு ஊக்கம் வரும் என்று சொல்லி இந்த இரண்டு நூல்களையும் அறிமுகப் படுத்துகிறேன்.

பாராட்டுரை:

நிதித்துறை இணைச் செயலர் திருமிகு அ. மு. சுவாமிநாதன், ஐ. ஏ. எஸ். அவர்கள் வழங்கிய பாராட்டுரை:

'தமிழில் எழுதுவோம்' என்ற நூலை வெளியிடும் வாய்ப்பினை அளித்த கழகத்தார்க்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்ளு கிறேன். தமிழால் முடியுமா என்ற கேள்வி எழுந்த காலத்தில், ஆட்சி மொழிக் காவலர் இராமலிங்கனார் அவர்கள் தமிழால் முடியும் என்பதை விளக்கப் பல புத்தகங்கள் எழுதினார்கள். இப்போது தமிழால் முடியும் என்று ஆகிவிட்டது.

இந்த நூலில் 12 தலைப்புக்களில் தமிழை எப்படிப் போற்றுவது என்பது பற்றி விளக்கியிருக்கிறார்கள். கிட்டத் தட்ட 50 ஆண்டுகட்கு முன்பே தமிழ் ஆட்சிச் சொல் அகராதி யைத் தொகுத்த பெருமை சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சியாளர் சுப்பையா பிள்ளை அவர்களைச் சாரும். அவர்களைப் பின்பற்றி மதுரைத் திருவள்ளுவர் கழகமும் திருச்சியிலே கூடிய புலவர் குழாமும் தமிழ் ஆட்சி மொழிக்கு வழிகோலினார்கள்.

எவ்வளவுதான் இருந்தாலும் அரசாங்கத்திலிருந்து ஓர் உந்துதல் இல்லை என்றால் எதுவும் நடைபெறாது. அதற்கு இன்றுள்ள அரசு நல்ல முடிவெடுத்து வருகின்றது.

இந்த நல்ல நூலை வெளியிட்ட பெரியார் சுப்பையா பிள்ளை அவர்கள் தொண்டு வாழ்க! பெரியார் இராமலிங்கனார் தொண்டு வாழ்க! என்று சொல்லி அனைவர்க்கும் வணக்கம் கூறி முடிக் கிறேன்.

டாக்டர் மெ. சுந்தரம் அவர்களின் பாராட்டுரை:

"ஆக்சுபோர்டு பல்கலைக் கழகத்தில் தமிழ் இலக்கியம் பற்றியும், தமிழ் வரலாறு பற்றியும் முதன் முதல் வந்த நூல் தீட்சிதருடைய நூல்தான். தீட்சிதர் சிலப்பதிகாரத்தை மிக நன்றாக மொழி பெயர்த்திருக்கிறார்கள். வஞ்சிக் காண்டத்தில் வீர உணர்ச்சி குன்றாமல் அப்படியே மொழி பெயர்த்திருக் கிறார்கள். மொழிபெயர்ப்பில் தமிழுக்கு ஓர் ஏற்றம் கொடுத் திருக்கிறார்கள். தூய்மையான உள்ளம் வாய்மையான கருத்து. இஃதொரு வெற்றியான மொழி பெயர்ப்பு. தீட்சிதர் குடும்பம் தமிழகத்திற்கு ஆற்றிய தொண்டு நாம் என்றும் மறக்க முடி யாதது.

சுப்பையா பிள்ளையவர்களின் தொண்டு பாராட்டத்தக்கது. நூலகங்களெல்லாம் இந்த நூலை வாங்கவேண்டும். சுப்பையா பிள்ளை அவர்களுக்கு இப்போதே சொல்லிக் கொள்ளுகிறேன். என்னுடைய கல்லூரி நூலகத்திற்கு 5 படிகள் வாங்கிக் கொள்வதென்று முடிவு செய்துள்ளேன். இது நான் செய்யும் முதற்பணி. எல்லாக் கல்லூரித் தலைவர்களும் 5 படிகள் வாங்கலாம்; அதற்குச் சட்டம் இடந்தருகிறது.

அடுத்துத் தமிழில் எழுதுவோம் என்ற நூலை எழுதிய கீ. இராமலிங்கனார் அவர்கள் 40 ஆண்டுக் காலம் அத் துறையில் உழைத்தவர். தமிழ் ஆட்சி மொழியாகி இருப்பது அவருடைய வெற்றியாகும்.

திருமிகு சிலம்பொலி செல்லப்பன் :

"தமிழில் எழுதினால் மட்டும் போதாது. தமிழில் உள்ள நம் இலக்கியங்களைப் பிற மொழிகளில் வெளியிடுதல் வேண்டும். அந்த அடிப்படையில் இன்று சிலப்பதிகாரம் வெளியிடப் படுகிறது.

புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்கள் ஒரு கவிதையில்,

"தாயெழிற் றமிழை என்றன்
　　தமிழரின் கவிதை தன்னை
ஆயிரம் மொழியிற் காண
　　இப்புவி அவாவிற் றென்ற
தோயுறு மதுவின் ஆறு
　　தொடர்ந் தென்றன் செவியில்வந்து
பாயுநாள் எந்த நாளோ!"

என்று கூறுகிறார்.

ஈழ நாட்டு இளங்கவிஞர் ஒருவர்,

"கன்னித் தமிழ் எனக்கு வேணுமேயடா—உயர்
கம்பன் தமிழ் எனக்கு வேணுமேயடா
தின்னத் தமிழ் எனக்கு வேணுமேயடா
பின்பு செத்துக் கிடக்கத் தமிழ் வேணுமேயடா"

என்கிறார்.

மண்வேண்டாம் பொன்வேண்டாம் என்றெல்லாம் இந்த உலகத்தில் உள்ள பொருள்களை வேண்டாம் என்கிறார். பாட்

டோடு பாட்டாகச் சொல்லுகிருர், "தேவர்க்கு அரசு நிலை வேண்டியதில்லை. அவர் தின்னும் சுவையமுது வேண்டிய தில்லை" என்கிருர்.

"சாவிலும் தமிழ் மணந்து சாகவேண்டும்—
என்றன் சாம்பலது தமிழ் மணந்து வீசவேண்டும்"
என்கிருர்.

அந்த உள்ளப் பாங்கு என்னறைக்கு அமைகிறதோ அன்றைக்குத்தான் இந்த நாடு எல்லாவகையிலும் முன்னேறும், என்ற அந்த உணர்ச்சியை மட்டும் ஐயா அவர்களின் திருவடியிலே காணிக்கையாக்கி, அடுத்த நூலினைப் பற்றி நான் ஏதாவது சொல்லாவிட்டால் சுவையாக இருக்காது.

சிலப்பதிகார மூலத்தைப் பார்த்து விட்டு, இந்த ஆங்கில மொழிபெயர்ப்பையும் பார்க்கின்றபோது, அதில் வருகின்ற ஒவ்வொரு வரியும் என் கண்களுக்கு நேராக வரும்படியாக அமைந்திருக்கிறது. இதற்காகத் தீட்சிதரின் குடும்பத்தாரைப் போற்றுகிறேன், வணங்குகிறேன், அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

"மாயிரும் பீலிமணிநிற மஞ்ஞைநின்
சாயற்கு இடைந்து தண்கான் அடையவும்"

என்ற அந்த அழுத்தத்தை ஒரு சிறிதும் மாருமல் தீட்சிதரின் மொழி பெயர்ப்பு எடுத்துக் காட்டுகிறது.

அவர் சிலப்பதிகாரத்தை ஆழ்ந்து கற்று ஆராய்ச்சி செய்த தனுல் வரிக்கு வரி இந்த மொழி பெயர்ப்பு மிகவும் சிறப்பாக அமைந்திருக்கிறது.

சிலப்பதிகாரக் காலம் இரண்டாவது நூற்ருண்டு என்று ஆணித்தரமாக வரையறுத்திருக்கிருர். பல்லவர்கள் ஆட்சிக்கு வருவதற்கு முன்னுல் இந்தக் காப்பியம் எழுதப்பட்டிருக்க வேண்டும் என்பது போன்ற அருமையான ஆராய்ச்சியெல்லாம் தரும் சிறந்த வரலாற்றுப் பேராசிரியராக இருக்கின்ருர். நாற்பது ஆண்டுகளுக்கு முன்னுல் செய்யப்பட்ட இந் நூலுக்கு, இன்றைக்குக் கிடைக்கக் கூடியன போன்ற விளக்கங்களெல்லாம் கிடைத்திருக்குமானுல் இது இன்னும் சிறந்த கருவூலமாக அமைந்திருக்கும்.

ஒன்று 'தமிழில் எழுதுவோம்,' என்றும் மற்ருென்று ஆங்கிலத்தில் சிலப்பதிகாரத்தின் மொழிபெயர்ப்புமாக இருக்கக்

கூடிய இந்த நூலையும் வெளியிட்டிருக்கும் கழகம் வாழ்க! அந்தக் கழகத்தை நடத்திச் செல்கின்ற கழக ஆட்சியாளர் வாழ்க! செயலாற்றுகின்ற மேலாளர், நூலகர் மற்றும் பொறுப்பிலே இருக்கும் அத்தனைபேரும் வாழ்க என வாழ்த்துகிறேன்.

நன்றியுரை :

ஆட்சிமொழிக் காவலர் திருமிகு கீ. இராமலிங்கனுர் அவர்கள் ஆற்றிய நன்றியுரையின் சுருக்கம் :

நன்றிகூற என்னை இங்கே நிறுத்தியிருக்கிருர்கள். இந்த நூலை எழுதிய என்னை அறிஞர்கள் பாராட்டினுர்கள். பாராட்டிய அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

ஆட்சிச் சொற்கள் எங்கெங்கே கிடைக்கும் என்பதை நான் எடுத்துச் சொன்னேன். நான் சொன்னவற்றையெல்லாம் அப்படியே பயன்படுத்த வேண்டும் என்று சொல்ல வரவில்லை. அவை ஆட்சியிலே இருக்கின்றன என்பதற்காகச் சொன்னேன். நாளடைவிலே அவை வரலாம். தமிழ் கரடுமுரடானது என்ற தப்பெண்ணம் இருக்கிறது. இது மாற வேண்டும். ஒலிகளைக் கொண்டு நாமே சொற்களை அமைத்துக் கொள்ளலாம். அமைச்சர்கள் போகுமிடங்களிலெல்லாம், 'தமிழில் எழுத வேண்டும்' என்பதை எடுத்துச் சொல்ல வேண்டும்.

எத்தனையோ சொற்களை நான் கவனித்திருக்கிறேன். நாற்பது ஆண்டுகளுக்கும் முன் அவற்றை ஏளனம் பண்ணினவர்களெல்லாம் இன்று அந்த நல்ல தமிழில் எழுதுகிருர்கள்.

முனிசிபால்டி என்கிருர்கள். ஒருவன் பசும்பால் டீ குடிக்கிருன். முனிசிபால் டீ என்ருல் அது என்ன டீ? எனவே எடுத்தவுடனேயே இது கடுமையாக இருக்கிறதே என்று எண்ணவேண்டாம்.

இந்தச் சின்ன நூலை இவ்வளவு சிறந்த முறையில் பாராட்டிய உங்கள் அனைவருக்கும் நன்றி. நீங்கள் அனைவரும் ஆம் ஒதினீர்கள் அதற்கும் என் நன்றி.

எல்லாவற்றுக்கும் மேலாக, என்னுடைய அண்ணு திரு. சுப்பையா பிள்ளை அவர்களுக்கு நன்றி தெரிவிக்கக் கடமைப் பட்டிருக்கின்றேன். இத்தகைய நூல்களை நான் எழுதினேன் என்ருல் அதற்குக் காரணம் அவர்கள் என்னை வேலை வாங்கி

ஞர்கள். அவர்களுடைய மருமகப்பிள்ளை திரு. கலியாண சுந்தரம் பிள்ளையும் என்னைத் தொடர்பாக ஏதாவது எழுதுங்க ளேன் என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள். அதன் பிறகு தான் செந்தமிழ்ச் செல்வியில் 11 தலைப்பில் 11 மாதங்கள் இந்த நூலை எழுதி வந்தேன். இப்போதுதான் அதற்கு உயிர் வந்தது. பின்னர் 12 ஆம் அதிகாரத்தையும் சேர்த்தேன்.

இது இக்காலத்திற்கு ஏற்ற நூல்; பயனுள்ள நூல். இதனை எழுதிய என்னைப் பாராட்டியதற்கு எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆட்சியாளர் நன்றியுரை :

கழக ஆட்சியாளர் உயர்திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் முடிவில் நன்றி தெரிவித்து ஆற்றிய உரையின் சுருக்கம்: மெய்யன்பர்களே !

இந்த விழாவிற்குக் காரணமாய் இருப்பன இரண்டு நூல்கள். 'ஒன்று சிலப்பதிகாரம் ஆங்கில மொழி பெயர்ப்பு. அது தீட்சிதர் அவர்கள் எழுதியது. மற்றொன்று 'தமிழில் எழுதுவோம்' என்ற நூல். அதனை எழுதியவர் ஆட்சிமொழிக் காவலர் திரு. கீ. இராமலிங்கனார் அவர்கள்.

இந்தச் சிலப்பதிகாரத்தை அழகாக வெளியிடுவதற்கு வாயிலாக இருந்தவர் நூலகர் திரு. முத்துக்குமாரசாமி அவர்க ளாவார். அதற்கு அவர் நிரம்ப அக்கறை எடுத்துக் கொண்டார். எல்லாம் அவர் பொறுப்பில்தான் நடைபெற்றன. ஆனால் எந்த நூலானாலும் அதன் மெய்ப்பினை நான் ஒரு முறை கட்டாயம் பார்ப்பது வழக்கம். இந்த நூலின் மெய்ப்புக்களை மட்டும் இரண்டு மூன்று தடவைகூடப் பார்த்திருக்கிறேன்.

அடுத்து ஆட்சிச்சொற் காவலருடைய அறிவாற்றல்களை யெல்லாம் நூலுருவில் கொண்டுவர அக்கறை கொண்டவன் நான்.

கழகம் பொருள் ஈட்டுவதற்காக ஏற்பட்ட நிறுவனமன்று. கொள்கைகளுக்காகவே ஏற்பட்ட ஒரு பதிப்பகம். நல்ல நூல் களை வெளியிடுவதையே நோக்கமாகக் கொண்டது கழகம்.

ஒரு பதிப்பகம் நூல் நிலையத்தை நடத்துவது என்பது வியக்கத்தக்கது. இந்த மறைமலையடிகள் நூலகம்போல அரிய நூல்களைக் கொண்ட நூலகம் இந்தியாவிலேயே இல்லை என்று

நான் நம்புகிறேன். இந்த நூலகத்தை டாக்டர், எம்.லிட், ஆகிய பட்டப் படிப்புக்கு, நூற்றுக்கு மேற்பட்ட ஆராய்ச்சி செய்கிறவர்கள் பயன் படுத்துகிறுர்கள்.

மேலும் 'செந்தமிழ்ச் செல்வி' என்னும் திங்கள் இதழ் 52 ஆண்டுகளாகத் தொடர்ந்து, குறிக்கோளிலிருந்து தவருமல் நடைபெற்று வருகின்றது. இவையெல்லாம் திருவருள் செயலால் நடைபெற்று வருகின்றன. இந்தப் பதிப்பகத்தின் வருவாயில் பேர்பாதி அறநிலையங்களை நடத்துவதற்காகவே பயன்படுத்தப்பட்டு வருகின்றது.

கழகம் இதுகாறும் 1760க்கு மேற்பட்ட நூல்களை வெளியிட்டிருக்கிறது. 200க்கு மேற்பட்ட விழாக்களை நடத்தி யிருக்கிறது. மாநாடுகள் பலவற்றை நடத்தியிருக்கிறது.

இந்த நூல் நிலையத்திற்கு எல்லோரும் எந்த வகையில் உதவி செய்ய வேண்டுமோ அந்த வகையில் உதவி செய்ய வேண்டும். டாக்டர் மெ. சுந்தரம் அவர்கள் சிலப்பதிகாரத்தின் 5 படிகள் வாங்கிக் கொள்வதாகச் சொன்னுர்கள். மிக மகிழ்ச்சி. இவர்களைப் போலவே பெரிய கல்லூரிகள் எல்லாம் வாங்கினுல் 300 படிகள் மிக எளிதாக விற்றுவிடும்.

அடுத்து, இந்த விழாவில் கலந்துகொண்ட சுவாமிநாதன் ஐ. ஏ. எஸ். அவர்களுக்கும், திரு. ம. பொ. சி. அவர்களுக்கும், அமைச்சர், துணைவேந்தர் ஆகியோர்க்கும், டாக்டர் ஔவை நடராசன் அவர்கட்கும், சிலம்பொலி செல்லப்பன் அவர்கட்கும் மற்றும் அன்பர்கட்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.



அருட்டிரு பாலமுருகனடிமை அருள்நிறை வாழ்த்து

அன்ப! அருளாசி.

விழா இனிது நடைபெற என் வாழ்த்துக்கள். "தமிழில் எழுதுவோம்" என்ற புத்தகப் பிரதி ஒன்றினை வி. பி. பி. அனுப்புக!

இரத்தினகிரி
7—4—78

(ஒப்பம்) பாலமுருகனடிமை

# வாழ்த்துக்கள்

சைவமும் தமிழும் இரு கண்களாகக் கொண்டு ஒல்லும் வகையெல்லாம் இடையருது தமிழ்ப்பணி செய்து வரும் கழகத்திற்கும், அதன் உரிமை பூண்டு தொண்டு செய்யும் திரு. சுப்பையா பிள்ளைக்கும் நமது நன்றி; பாராட்டு; வாழ்த்து!

தவத்திரு குன்றக்குடி அடிகளார்.

நல்ல தமிழை நாட்டில் பரப்பும் பணியில் சை. சி. நூற்பதிப்புக் கழகம் இணையற்று விளங்குகிறது. கழகத்தின் கைகளை வலுப்படுத்துவது தீந்தமிழில் நாட்டமுடைய திறலாளர் அனைவர்க்கும் நீங்காக் கடமையாகும். திருமிகு சுப்பையா பிள்ளை அவர்களைப் போன்ற உறுதிவாய்ந்த சான்ருேரை இஞ்ஞான்று காண்டல் அரிது.

—கோ. முத்துப் பிள்ளை, சென்னை.

தமிழகத்தின் தலைநகரமாக இருப்பது சென்னை மாநகரம். இங்கு, சென்னைப் பல்கலைக் கழகத்தோடு இணைந்த தமிழ்க் கல்லூரி இல்லாமல் இருப்பது ஒரு பெருங் குறையாகும். தமிழ்மொழி வளர்ச்சிக்கு ஆக்க மும் ஊக்கமும் அளித்துவரும் தமிழக அரசு இக்குறையினைப் போக்குதற்குச் சென்னையில் அரசினர் தமிழ்க் கல்லூரி நிறுவும்படி நாம் மாண்புமிகு கல்வி அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ள வேண்டும்.

—பேராசிரியர் பூ. ஆலாலசுந்தரம் செட்டியார், தாம்பரம்.

வாழையடி வாழையாக வரும் வாசகர் கூட்டத்திற்கு அறிவு உரம் ஊட்டும் அரும்பெரும் நூல்களை நிரல்பெற வெளியிட்டு உதவுவது ஒரு நல்ல பணி. சிந்தைக்கினிய இப்பணியை சை. சி. நூற்பதிப்புக் கழகம் செவ்வையாகச் செய்து வருகிறது.

—பேராசிரியர் ரம்போலா மாஸ்கரேனஸ், திருச்சி.

வேறு எந்த வெளியீட்டாளரும் இத்தகைய அற நிறுவனங்களை அமைத்துச் சிறப்புத் தொண்டு செய்து வருவதாக எனக்குத் தெரியவில்லை.

—பேராசிரியர் க. வடிவேலாயுதம், தாம்பரம்.

கழகம் தொடாத துறையில்லை; தொடராத பணியில்லை; தொட்டுப் புகழ்பெருத பொருளில்லை; தமிழ் நூல்கள் எல்லாவற்றையும் ஒரே இடத்தில் வாங்குவதற்குத் துணை செய்யும் நூற்களம் கழகம்.

—பேராசிரியர் மு. வை. அரவிந்தன், கிருட்டிணகிரி.

பொருள் மிகுந்தவர் தம் பொருளைத் தமக்குப் பிற்காலத்தில் எதற்கோ விட்டுச் செல்வதைவிட, இத்தகு பதிப்பகங்களுக்கு

மானியமாக வழங்க ஏற்பாடு செய்தல் சாலச் சிறந்தது. இத்தகைய நிலையான பயன் தரத்தக்க நற்பணியில் தமிழ் இனம் ஈடுபடுமானல் நாடு அவர்களை என்றும் மறக்காது.

—சிறுவை மோகனசுந்தரன், சென்னை.

There is no gain saying the fact that your esteemed insitution has been the vanguard of publishing books on various aspects of Tamil Literature with special emphasis on Sangam Literature. May these five books be the forerunner of many more to come.

*—Blackie & Son (India) Limited.*

மற்றும், கீழ்க்காணும் பெருமக்களிடமிருந்தும் கம்பி வழியும் கடித வழியும் வாழ்த்துச் செய்திகள் வந்துள்ளன.

அருட்டிரு அழகரடிகள், மாம்பாக்கம்; தவத்திரு. பாலமுருக னடிமை, இரத்தினகிரி; முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம்; திவான்பகதூர் தி. மு. நாராயணசாமிப் பிள்ளை, எம்.ஏ. பி.எல்., திருச்சி; பெ வெங்கடாசலம், திருத்தணி; இளமுருகு பொற்செல்வி, குழித்தலை; கா. வேழவேந்தன், பி. ஏ., பி. எல்., சென்னை; பேராசிரியர் வி. மா ஞானப்பிரகாசம், பாளையங்கோட்டை; புலவர் மி. மு. சின்னண்டார், அம்மாப்பேட்டை; ஆர். விசுவநாதம், சென்னை; தணிகை உலகநாதன், சென்னை; டாக்டர் ஆறு அழகப் பன், அண்ணமலைப் பல்கலைக் கழகம்; வி. எஸ் துரைசிங்கம், எம்.ஏ., பி.டி., பி.எல், சென்னை; டாக்டர் வி. வீராசாமி, அடை யாறு, சென்னை; சு. காளியப்பன் எம். ஏ., ம. தி. தா. இந்துக் கல்லூரி, நெல்லை; வி. செ. கந்தசாமி, பி ஏ., பி லிட்., எல்.எல்.பி. சேலம்; உளுந்தூர்ப்பேட்டை சண்முகம், எம். ஏ., எம். லிட். சென்னை; பேராசிரியர் ஆபிரகாம் அருளப்பன், பாளையங் கோட்டை; வித்துவான், வை குஞ்சிதபாதம் பிள்ளை, நுங்கம் பாக்கம், சென்னை; பேராசிரியர் இலஞ்சி அ. இ. முத்துக்குமார சாமி, திருச்சி; பேராசிரியர் தி. வ. காந்திமதிநாதன், மாயூரம்; சு. திருஞானம், மதுரை; டாக்டர் தி. முருகரத்தினம், மதுரை ஆகியோராவர்.

## ஐந்து நற்கனிகளுக் காகிய திருவிழா

நிறை பெறு கல்வி நிலவும் புலவர்
மறைமலை யடிகளின் மாண்பெறு நூலகம்
செந்தமிழ்ச் செல்வம் திகழச் செய்யும்
முந்துநற் பணிநலம் முத்தமிழ் உலகின்
விந்தையாம்; அதன்மிசை விளைந்து சுவைக்கும்
ஐந்துநற் கனிகளுக் காகிய திருவிழா
சிந்தனை குளிரச் சிவனருள் பொலிய
நற்றமிழ் வாழ்கென நலங்கூ றுதுமே.

—தவத்திரு சுத்தானந்த பாரதியார்.

## இன்னும் பலநூல் இனிது வெளியிடுக!

மைவருங் கண்டத்து மாதேவன் தன்னருளால்
சைவசித் தாந்தத் தனிக்கழகம்—கைவரவே
இன்னும் பலநூல் இனிது வெளியிட்டு
மன்னுகவிப் பேருலகில் வாழ்ந்து.

—கருப்பக்கிளர் சு. அ. இராமசாமிப்புலவர்.

## செந்தமிழ் விழாக்கள் வாழி!

பயன்மிகு பழநூல் காத்தல்
　　பண்புறப் புதுநூல் ஆக்கல்
நயன்மிகும் ஆய்வு நூல்கள்
　　நன்கனம் படைக்க வூக்கல்
வியன்மிகு மொழிபெ யர்ப்பால்
　　விரிபுகழ் சேர்த்தல் என்னும்
செயன்முறை விளக்க வல்ல
　　செந்தமிழ் விழாக்கள் வாழி.

—புலவர் இரா. இளங்குமரன், மதுரை.

## இவர் பணிகள் வாழ்க!

சுந்தரனர் தந்தருளும் தேவார
　　ஆய்வுரை நூல் தோயும் மாண்பு
தந்தருள்ஊ மைக்குயில்நூல் கயற்கண்ணி
　　திருவடிச்சீர் சாற்றும் இன்பச்
சந்தமிகு நூல்சிலம்பை ஆங்கிலத்தில்
　　மொழிபெயர்த்த தரமா ரும்நூல்
இந்தநாள்தமி ழாட்சிக் கேற்றநூல்
　　ஆதியன எல்லாம் வேண்டும்

என்றுணர்ந்து மக்கள்கொள எழிலுறவே
　　பதிப்பித்து இன்பம் கண்டு
நன்றுணர்மே லோர்களெலாம் சிறப்பித்தே
　　உரைநிகழ்த்த நலங்கொள் நாளாம்
இன்றுவிழா எடுத்துவந்தார் எழிலாரும்
　　சுப்பையப்பேர் ஏற்ற சீலர்
மன்றுடையான் திருவருளால் இவர்பணிகள்
　　வாழ்க என வாழ்த்து வோமோ.

—புலவர் தி. மு. சங்கரலிங்கம், திருவாமாத்தூர்.

## நற்பணிக்கு வாழ்த்துரைப்போம்

சிங்கார வேலனர் செழுந்தமிழின் சுவைமலிய
இங்கின்று படைத்துள்ள எழில் 'ஊமைக்குயில்' என்னும்
பொங்குதமிழ் நாடகத்தைப் புதிதாகப் பதிப்பித்த
தங்குபுகழ் கழகத்தின் தனிப்பணிக்கு வாழ்த்துரைப்போம்.

தென்மொழியாம் தமிழ்மொழியே திகழுதற்காய் இராமலிங்கர்
வண்ணமுறப் படைத்துள்ள வளர்' தமிழில் எழுதுவோம்'
என்னும்நூல் தனைப்பதித்தே இனியவழி உதவுகின்ற
தன்மையமை கழகத்தின் தனிப்பணிக்கு வாழ்த்துரைப்போம்.

இளங்கோவின் சிலம்பெடுத்தே இராமச்சந் திரர்செய்து
விளங்குகின்ற மொழிபெயர்ப்பை வியன்பதிப்பாய் வெளியிட்டே
உலகிற்குத் தமிழ்ப்படைப்பின் உயர்பாங்கைப் பரப்பிமிகு
நலம் விளக்கும் கழகத்தின் நற்பணிக்கு வாழ்த்துரைப்போம்.

—புலவர் பொ. முனியப்பன், கூகலூர்.

## மொழிகாக்கும் தொண்டே முதல்

நல்ல தமிழ்நூல்கள் நாளும் வெளியிட்டுக்
கல்வி வளர்க்கும் கழகத்தார்—செல்லும்
வழியெல்லாம் நற்றமிழ்த்தாய் வாழ்த்தொலிகள் கேட்கும்;
மொழிகாக்கும் தொண்டே முதல்.

தமிழ்வளர்ப்பார் தம்மைத் தமிழ்வளர்க்கும்; அந்த
அமிழ்தத்தால் இன்பமடை யார்யார்?—கமழ்கின்ற
பூமணத்தில் தோய்ந்த புதுத்தென்றல் போல்கழகம்
மாமணத்தை நல்கும் மகிழ்ந்து.

—ஆலந்தூர் கோ. மோகனரங்கன்.

## தாயென உதவ வேண்டும்

ஆயிரம் நூல்வ ழங்கி
ஆலென வளர்ந்து நிற்கும்
தூயவர் சுப்பை யாவின்
துலங்கிடும் கழகந் தம்மை
தாயக அரசும்; ஆளும்
தமிழக அரசும் போற்றித்
தாயென உதவ வேண்டும்
தக்கநல் விருது தந்தே.

—இமயபாரதி, சென்னை.

## வல்ல நூற்கழகம் வாழி !

முன்னைத் தமிழின் முதுநூல்கள் தம்மையிங்கே
எண்ணிப் பதிப்பித்தே இன்பம் தருகின்ற
வண்ணக் கழகந்தான் வாழி !
ஐந்தரிய நூல்களையே ஆக்கி வெளியிட்டுச்
செந்தமிழின் தொண்டு சிறக்கச் செய்கின்ற
பைந்தமிழின் கழகந்தான் வாழி !
அச்சுக்கு வாராத நூல்கள் அனைத்தையுமே
மூச்சு விடுமுன்னே நன்றாய்ப் பதிப்பிக்கும்
மெச்சு புகழ்க்கழகம் வாழி !
பல்கலை ஆற்றல் மிகுந்திருக்கும் சான்றோரின்
நல்லறிவை நூலாக்கி நற்றமிழ்க்குத் தொண்டியற்ற
வல்ல நூற்கழகம் வாழி !

—நெல்லை ந. சொக்கலிங்கம், எம்.ஏ.

## முத்தமிழ்போல் வாழ்க !

துறைகள் தோறும் நூல்பதித்தார்
தூய தமிழில் வெளியிட்டார்
மறைகள் இலக்கண உரைகளும்
மறையா அறிவுப் புதினங்கள்
இறைவன் அருளைப் பெறுவோர்தம்
இன்னி சைப்பா டல்பலவும்
முறையாய்ப் பதித்தக் கழகத்தார்
முத்த மிழ்போல் வாழியவே !

—சு. இலம்போதரன், சென்னை.

---

## இப்போதே சொல்லிக் கொள்கிறேன்

நான் இப்போதே சொல்லிக் கொள்ளுகிறேன், என்னுடைய கல்லூரி நூலகத்திற்கு இந்தச் சிலப்பதிகாரத்தின் ஐந்து படிகளை வாங்கிக் கொள்வதென்று முடிவு செய்துள்ளேன். இது நான் செய்யும் முதற்பணி. மற்ற எல்லாக் கல்லூரித் தலைவர்களும் ஐந்து படிகள் வாங்கலாம். இதற்குச் சட்டம் இடந்தருகிறது.

—டாக்டர் மெ. சுந்தரம், மாநிலக் கல்லூரி
(சிலப்பதிகாரம் ஆங்கில மொழிபெயர்ப்பு நூல்
வெளியீட்டு விழாவில் குறிப்பிட்டது)

# சிவஞானபோத ஆராய்ச்சி

[அருட்டிரு அழகரடிகள்]

(சிலம்பு ௰௨, பரல் எ, பக்கம் ௩௫௨-இன் தொடர்ச்சி)

'இரண்டலல்லன்' என்பது 'வேறலல்லன்' என்னும் பொருட்டு; வேறலல்லனுயினும், 'சிவம் வேறு உண்டு' என் பதை உணர்த்திற்று. இரண்டும் ஒன்றே என்னும் 'சிவாத்து விதிகள்' முதலியோர் கருத்தைச் செய்யுள் ஏற்றுக்கொள்ள வில்லை; தூல நுட்பக் கலப்பில் வரும் இரண்டன்மை (அத்து வித) உண்மையை அவர்கள் அறியாதவர்களாய் இருக்கிருர்கள். திருவிசைப்பாவில் 'உணர்வு சூழ் கடந்ததோர் உணர்வே' என்று இறைவன் உரைக்கப்பட்டான்.

வாக்குக்கும் மனத்துக்கும் ('பாச பசு ஞானங்க'ளுக்கு) எட்டாதவன் என்னும் நிலையில் 'வாக்கு மனுதீதம்' என்றும், 'பதி ஞானத்'துக்கு எட்டுவான் என்னும் நிலையில் 'வாக்கு மனுதீத கோசரம்' என்றும் ஆசிரியர் தெரிவித்தார்.

இரண்டாம் பிரிவு இவ்வாறு சத்தின் இயல்பு உணர்த் திற்று. 'சிவசத்'தாகிய சிவத்தின் சிறப்பிலக்கணம் இதனுல் தெரிந்தது.

இரண்டாம் பிரிவில் வரும் ஐந்து செய்யுட்களும், முறையே 'வாக்கு மனுதீதம்' என்பதை ஒத்துக்கொண்டு, 'கோசரம்' ஆதல் இல்லை என்று கூறும் 'மாயாவாதி'களையும், 'கோசர' மாதல் பொருந்தும், 'வாக்கு மனுதீதம்' என்பதே பொருந்தாது என்னும் 'நையாயிக'ரையும், 'யோக முறை'யில் தேனிப்புச் செய்தால் 'கோசர'மாதல் தெரியும் என்னும் 'பாதஞ்சல'ரையும், வீடுபேற்றில் உயிர் சிவத்தோடு சமம் என்னும் 'சிவசமவாதி' களையும், 'கோசர'மாம் என்பதே இல்லை, உயிர்கள் சிவமாய் விடு கின்றன என்னும் 'சிவாத்துவிதர்' முதலியோரையும் தெளி விப்பன.

## ஏழாம் நூற்பா:

சிவஞானபோதத்தின் முதல் ஆறு நூற்பாக்கள் 'பொது அதிகாரம்' எனப்படும். அடுத்த ஆறு நூற்பாக்கள் 'உண்மை அதிகாரம்' என்று சொல்லபபடும்.

பொது அதிகாரம் என்ருல், கடவுள் மலம் உயிர் என்னும் முப்பொருள்களைப் பற்றிய இருப்புகளையும் இலக்கணங்களையும்

சொல்லுவது. ஒரு பொருளின் இருப்பு அதன் இயல்பு என்னும் இரண்டும் தெரிந்துகொண்டபின், உயிர்க்குத் துய்க்க ஒரு விருப்பம் உண்டாகும். துய்க்கக் கூடியதாயிருந்து அறமுறை யும் பொருந்தினுல், அப்படித் துய்ப்பதுதான் முறை. ஆதலால் துய்ப்பது அப்பொருளின் சிறப்பு நிலையாய் அஃதாவது உண்மை நிலையாய் விளங்குகிறது. துய்ப்பதற்குமுன், அப் பொருளின் இருப்பும் இயல்பும் தெரிந்துகொள்வது, அதனைப் பொதுவாகத் தெரிந்துகொள்ளுவதாகும்.

முதல் நூற்பாவில், உலகம் முத்தொழிற் படுவதனுல், கடவுள் இருப்புத் தெரிந்துகொள்ளப்பட்டது.

இரண்டாம் நூற்பாவில், மலங் காரணமாக முத்தொழில் நேர்வதனுல், மலங்களின் இருப்பும் தெரிந்தது.

மூன்ரும் நூற்பாவில், கடவுளையும் உலகத்தையும் பயன் கொள்ளும் உயிரின் இருப்பு விளக்கப்பட்டது.

இந்த மூன்று நூற்பாக்களும் முப்பொருள்களின் இருப்புக் கூறுவன. நான்காம் நூற்பாவிலிருந்து மூன்று நூற்பாக்கள் அவற்றின் இயல்புகளைத் தெரிவிக்கும்.

நான்காம் நூற்பா மூன்ரும் நூற்பாவின் தொடர்பாக வருவதனுல், உயிரின் இருப்போடு தொடர்ந்து உயிரின் இயல் புங் கூறியதாயிற்று. அதன் இயல்பு ஐந்தவத்தைப் படுவது.

ஐந்தாம் நூற்பா, மலங்களில் புகுந்துகொண்டு உதவும் மறைப்பம்மையின் இயல்புரைக்கும் வாயிலாக, அவருள் அடங் கும் ஏனைப் பாசங்களின் இயல்பும் உணரவைக்கிறது.

ஆரும் நூற்பா, கடவுளின் இலக்கணம் உரைக்கிறது; உயிர்களின் சுட்டறிவால் உணரப்படாமல் அருளறிவால் உணரப்படும் சிவசத்து அது, எனப்படுகிறது.

இங்ஙனம் ஆறு நூற்பாக்களாலும் முப்பொருள்களின் இருப்பையும் அவற்றின் இயல்பையும் உணர்த்தியபின், ஏழு முதல் ஒன்பது வரையில் மூன்று நூற்பாக்கள், துய்க்கும் முறை யையும் (சாதனத்தையும்), அடுத்த மூன்று நூற்பாக்கள் துய்ப் பதன் பயனையும் தெளிவிக்கின்றன.

ஏழாம் நூற்பாவில் துய்க்கும் தகுதியும் உரிமையும் உடையது முப்பொருள்களில் உயிரே என்பதுபற்றி வருகிறது.

எட்டாம் நூற்பாவில், துய்க்கும் முறையை உணர்த்தும் குருவைப் பற்றியும் அவர் தெரிவிக்கும் தெளிவுபற்றியும் வரு கிறது.

ஒன்பதாம் நூற்பாவில், துய்க்கும் முறைமை இன்னது என்பது தெரிவிக்கப்படுகிறது; அம்முறைமை 'பதிஞானமே' (சாதனம்) என்பதும், அதனை நிலைபெறுத்துவது 'திருவைந் தெழுத்து' என்பதும் காட்டப்படுகின்றன.

பத்தாம் நூற்பாவில், மலங்கள் கழலும் 'விடுதலைப் பேறு' வருகிறது.

பதினோராம் நூற்பாவில் 'திருவடிப் பேறு' கூறப்படுகிறது.

பன்னிரண்டாம் நூற்பாவில், அத் திருவடிப்பேறு நிலை கொள்ளும் வகைகள் தெளிவிக்கப்படுகின்றன.

இங்ஙனம் பின் ஆறு நூற்பாக்களில் முதல் மூன்று பயிற்சி வகைகளையும் அடுத்த மூன்று அவற்றின் பயன்களையும் விளக்கிச், சிவஞானபோதம் முடிகிறது.

சிறப்பதிகாரமாகிய உண்மை அதிகாரத்தில் வருகின்ற ஆறு நூற்பாக்களையும் முறையே இனிப் பார்க்கலாம்.

இவற்றில், ஏழாம் நூற்பா, கடவுள் உலகம் உயிர் என்னும் முப்பொருள்களில், உலகத்தைவிட்டுக் கடவுளைச் சாரும் திறம் உயிர்களுக்கு உண்டு என்பதை விளக்கும். இப்படிச் சொல்லு வது உயிரின் இலக்கணம் உணர்த்துவதுபோலத் தோற்றும்; உயிரின் இலக்கணம் நான்காம் நூற்பாவில் வந்தது. இங்கே ஏழாம் நூற்பாவில், துய்க்கும் முறையில் உயிருக்கு உள்ள உரிமை காட்டப்படுகிறது. இலக்கண இயலுக்கே இந் நூற் பாவை ஒரு புறனடையாக வேண்டுமானுற் கொள்ளலாம். தனக்குத் துய்க்கும் உரிமை இருக்கிறது என்று உயிர் தெரிந்து கொண்டால் அதற்கு எழுச்சி உண்டாகும்; அதனுல் ஏழாம் நூற்பாவில் இவ் வுரிமை கூறப்பட்டது.

"யாவையும் சூனியம் சத்தெதி ராகலின்
சத்தே அறியா தசத்தில தறியா
திருதிறன் அறிவுள திரண்டலா ஆன்மா."

பொருள் :

யாவையும் சூனியம் சத்து எதிராகலின் - சிவத்துக்கு எதிரில் இருப்பதனுல் எல்லாப் பொருள்களும் விளக்கமில்லாமல் இருக்கின்றன; சத்தே அறியாது - உள்பொருளாகிய முப் பொருள்களுள், சிவசத்து என்பது, ஏனை இரண்டையும் அறிந்து நுகரும் கட்டாயம் இல்லாதது; அசத்து இலது அறியாது - அசத்து என்றும் பொருள் அறிவில்லாததாதலால், சிவத்தை

அறிந்து நுகரும் திறமில்லாததாய் இருக்கின்றது; இரண்டு அலா ஆன்மா - ஆதலால் சத்தின் இயல்பும் அசத்தின் இயல்பும் என இவ்விரண்டு நிலையும் அல்லாத உயிரினியல்பு; இரு திறன் அறிவு உளது - சத்து அசத்து என்னும் இரண்டு பொருள்களை யும் அறிந்து நுகரும் அறிவும் உணர்வும் உள்ளது.

அறியாமைப் பொருள்களாகிய மாயைக் கருவிகள் சிவசத் தின்முன் விளங்காமற் போனாலும், வீடுபேற்று நிலையில் சிவகரணமாய் மாறிச் சிவத்தை அறியக்கூடுமே என்று ஓர் ஐயம் தோன்றும்; ஆயினும், அவை அறியாமைப் பொருள்களாய் அறிவு இல்லாமலிருத்தலால் வீடுபேற்றிலும் அறிய இயலாது என்று தெரிந்துகொள்ள வேண்டும். விளங்காமையோடு அறிவும் இல்லாதது என்று, 'விளங்காமை' ஒரு காரணமும் 'அறிவில்லாமை' ஒரு காரணமுமாக, அசத்துக்கு இரண்டு காரணங்களை ஆசிரியர் கூறினார்.

அசத்துப் பொருள்களை அறிந்து நுகரும் திறமும் சிவ சத்தை உணர்ந்து நுகரும் திறமும் ஆக இருவகையான நிலை யும் ஆன்மாவுக்கு உள்ளனவாதலால், பாசத்தை நுகரும்போது அதற்கேற்ற அறிவுநிலையும், சத்தை நுகரும்போது அதற் கேற்ற உணர்வு நிலையும், ஆன்மாவுக்கு இருக்கவேண்டும்.

சத்து அசத்து என்னும் இரண்டையும் நுகரும் திறம் ஆன்மாவுக்கு இருப்பதோடு, அவ் விரண்டும் அல்லாததாகவும் ஆன்மா இருக்கிறது. ஆதலால் சத்து அசத்து என்னும் இரண்டுக்கும் அது வேறானது. வேறாய் இருந்தால் மட்டுந்தான் எதுவும் எதையும் நுகரமுடியும். இரண்டினுள் ஒன்றுதானோ உயிர் என்று ஏற்படும் ஐயத்துக்கு 'இரண்டு அலா ஆன்மா' என்று ஆசிரியர் முடிவு கூறினார். ஆனால், இரண்டையும் அறிந்து நுகரும் உரிமை உடையது என்பதற்கு, 'இருதிறன் அறிவுளது' என்றும் விளக்கினார்.

'சூனியம்' என்றது, இங்கு விளங்காமைப் பொருட்டு: 'சத்தே' என்பது, உள்பொருள்களுள் சிவசத்தே எனப் பிரிந்து பொருள் தருதலால் ஏகாரம் பிரிநிலை; யாவையும் என்னுமிடத் தில் எல்லா அறியாமைப் பொருள்களையும் நினைந்து பன்மை யாய்க் கூறினார். 'அசத்து' என எல்லாவற்றையும் பின்பு ஒருமைப்படுத்தியதனால், 'இலது அறியாது' என்று ஒருமையில் வந்தது. 'இலதாதலின் அறியாது' என்று காரணப் பொருளில் கொள்ளவேண்டும். 'சிவம்' என்பது ஒன்றேயாதலால் ஒருமை யிலேயே இயல்பாய்க் கூற நேர்ந்தது. 'அறிவும் உளது' என்று முற்றும்மை கொள்க. உளது - உள்ளது, அலா - அல்லாத.

'ஆன்' என்பதும் 'மா' என்பதும் தமிழேயாதலால் உயிரை 'ஆன்மா' என்பது தமிழ் வழக்கு. 'ஆன்' என்பது மென்மைக்கும் 'மா' என்பது ஓரளவு அறிவின்மைக்கும் வந்தன; ஆதலால், 'பசு' என்னும் விலங்கு ஓரளவு அறிவு உடையதாயும் தக்க அறிவு இல்லாததாயும் இருக்கிறது. ஆதலால், இயல்பில் அறிவுடையதாய், ஆனால் அறிவிக்க அறியும் நிலை உடையதாய் உயிர் இருத்தலால், 'ஆனதிய மா' எனக் கொள்ளப்பட்டது.

இந்த நூற்பா, 'யாவையும் சூனியம் சத்தெதிராகலின் சத்தே அறியாது' எனவும், 'அசத்து இலது அறியாது' எனவும், 'இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா' எனவும், மூன்று பிரிவுகள் உடையது.

முதல் பிரிவு :

சிவத்தை உயிர் நுகருமிடத்தும், தன்னை மறந்து நுகர்கின்றது. தன்னை மறந்த நிலைக்கு 'உணர்வு நிலை' என்று பெயர். தன்னை மறவாத நிலை 'அறிவு நிலை' யாகும். முன்னையது அன்பு நிலை; பின்னையது அறிவு நிலை. அறிவு நிலைக்குத்தான், எதையும் சுட்டியறிந்து ஆராயும் வகை உண்டு. அப்படிக் குறித்து அறியாமல், உணர்வினால் ஒருங்கே உணர்ந்து கொள்ளக் கூடியவர் கடவுள். ஏனென்றால், அவருக்கு வரம்பு ஒன்றும் இல்லை.

'மரத்தில் இலைகள் ஒன்றியிருக்கின்றன; அதுபோல வீடு பேற்றிலுங் கடவுளோடு மற்றவை ஒன்றியிருக்கின்றன. ஒன்றியிருக்கும் இலைகளோடு சேர்த்துத்தான் 'மரம்' என்று மொத்தமாகச் சொல்லுவது வழக்கம். அதுபோல வீடுபேற்றிலும் எல்லாம் கடவுளோடு ஒன்றியிருத்தலால் அங்கே வேறுபாடு இல்லை; எல்லாவற்றையும் சிவம் என்றே சொல்லவேண்டும் என்று 'சிவாத்துவித சைவர்' கூறுவர். ஆனால், இங்கே ஆசிரியர், 'யாவையும் சூனியம் சத்தெதிராகலின்' என்று கூறிவிட்டார். உள்ளதை உள்ளதாகவே சொல்லவேண்டுமாதலால் அவ்வாறு கூறினார். அதனால் வீடுபேற்றில் அசத்துப் பொருள் உண்டானாலும், சத்தினிடத்து அசத்து விளங்குவதில்லை (பிரகாசியாது);

இப் பிரிவிற்கு ஆசிரியர் கூறும் மேற்கோளும் இக் கருத்தில் வந்தது; அதற்காக 'மெய்யினிடத்துப் பொய் அப்பிரகாசமாய் நிற்றலான்' என்று ஓர் ஏதுவும் கூறிக் கொண்டார். இது 'சத்காரிய வாதம்'!

இலைகள் மரத்திலிருந்து முன்பு பிரிந்திருக்கவில்லை; பிரிந்த இலைகள் பின்பு சேர்ந்து மரம் என்று மொத்தப் பெயர் கொள்ளவும் இல்லை. ஆனால், அசத்துக்கள் முன்பு பாசக் கருவிகளாய் வேறாய் இருந்தன. பின்பு உயிர்க்குப் பதிஞானம் வந்தபோது அதனோடு ஒட்டிச் சிவகரணங்களாய் மாறின. இந்நிலையில், எல்லாம் ஒன்று என்பது எப்படி?

'முற்றுணர்வுடைய சிவத்துக்கு, 'அறியாமைப் பொருளையும் அறிந்து கொள்ளும் சுட்டறிவும்' உண்டு என்றால் என்ன? எனவும் ஒரு நினைவு தோன்றும்; இறைவனுக்கு இயற்கையுணர்வு என்பது, தன்னியல்பு; அப்படி இருக்கும்போது அவற்குச் சுட்டறிவு எதற்கு? ஆதலால் ஆசிரியர் 'பிரகாசியாது' என்று அசத்துக்கு, மேற்கோள் கூறினார்.

தன்னியல்பு இயற்கையானது; எக்காலத்தும் நிலைபெறுவது. ஆசிரியர் கூறிய காரணத்தில், 'மெய்' என்றது இத் தன்னியல்புதான்.

சுட்டறிவும் பெருமையால் முற்றுணர்வுக்கு அது குறைவாகாதா? என்று பின்னும் கேட்கத் தோன்றும். இந்த ஐயத்தை நீக்குவதற்காக நூலில் ஓர் எடுத்துக்காட்டுச் செய்யுள் வருகிறது.

*"அன்னியமி லாமை அரற்கொன் றுணர்வின்றும்;*
*அன்னியமி லான்அசத்தைக் காண்குவனேல்—அன்னியமாக்*
*காணான்; அவன்முன், கதிர்முன் இருள்போல*
*மாணா அசத்தின்மை மற்று"*

**பொருள் :**

அன்னியம் இலாமை அரற்கு உணர்வு ஒன்று இன்று ஆம் - உலகமும் உயிரும் தனது பரவலில் அடங்கி வேற்றுமையில்லாமல் இருத்தலால், அவ்வாறு உடனாய் நிற்கும் சிவத்துக்கு எதனையும் சுட்டி அறியக்கூடிய அறிவு வேண்டப்படுவதில்லை; அன்னியம் இலான் அசத்தைக் காண்குவனேல் அன்னியமாக் காணான் - அப்படி வேறில்லாதவன் தன்முன் விளக்கமில்லாமற் கிடக்கும் அசத்துப் பொருளைக் காண நேரும்போது (தனது, முற்றுணர்வால் ஒருங்கே அறிவானே அல்லாமல்) வேறாயிருக்கும் பொருளைப் போலச் சுட்டி அறியும் அறிவு கொண்டு அதனை அறிவதில்லை; கதிர்முன் இருள் போல்— ஞாயிற்றின் முன் இருளைப்போல; அவன்முன் மாணா அசத்து இன்மை மற்று - விளக்கமில்லாத காரணத்தால் அப் பெருமானுக்கு முன், அசத்துப் பொருள்கள் பெருமை உறா.

உயிர்க்கு அறிவு ஓரளவே உள்ளது. உயிர் அசத்துப் பொருளை அவ்வறிவினால் அறியலாம். சிவம் எல்லாம் ஒருங்கே அறிந்தாங்கு அறியும் முற்றுணர்வாகிய பெரிய நிலை உடையவ னாதலால், ஒன்றையும் குறித்து அறிந்துகொள்ளும் அறிவுநிலை அவனுக்குத் தேவையில்லை; அவன் பரவலில் அடங்கி அவனுக்குப் பயனின்றிக் கிடப்பன அசத்துப் பொருள்கள்.

'கடவுளுக்கு முன் அசத்துப் பொருள்கள் வேற்றுமையாய்த் தெரிவது மில்லை; அறிந்துகொள்வதற்கு வேற்றுமை வேண்டும்; கடவுளும் அசத்துப் பொருளை வேற்று நிலையிற் காணாது' என் பது இச் செய்யுளின் கருத்து.

மற்று, வினைமாற்று. 'கதிர்முன் இருள்' என்று ஆசிரியர் எடுத்துக்கொண்ட உவமை, அதன்முன் அது விளங்காமை ஒன்றுக்கே; இது முற்றுவமை அன்று; ஒரு புடை உவமை என்பர் சிவஞான முனிவரும்.

இரண்டாம் பிரிவு:

முதல் பிரிவில், விளங்காமைக் கருத்து வந்தது. இரண் டாம் பிரிவில், அந்த அசத்துக்கு அறிவில்லை என்பதும் வரு கின்றது.

கண்ணாடியில் நிழல் உண்டாவது போல வீடுபேற்றிலும் முன்போல் ஆன்மாவினால் அசத்துக்கு ஏன் அறிவு உண்டாகக் கூடாது என்று சிவசங்கிராந்தவாதியர் நினைப்பர். இயற்கை யிலேயே அறிவில்லாததற்கு அறிவு எப்படி உண்டாகும் என்னும் கருத்தால், 'அசத்தினுக்கு உணர்வின்று' என்று இந்தப் பிரிவின் மேற்கோள் தெரிவித்தது; மேலும், வீடுபேற் றில் உயிர்க்கு சிவசத்தால் உணர்வு பெருகிவருதலால் 'அசத்துப்' பொருள்களால் அறிவு விளங்க வேண்டிய கட்டாயம் இல்லை.

பாசஞானம் என்று சொல்லும்போது, பாசத்துக்கே ஞானம் இருப்பதாக எண்ணினால் என்ன என்றும் ஒரு நினைவு எழும். பாசம் வாயிலாக உயிர்க்கு நிகழும் ஞானமே பாச ஞானம் எனப்பட்டதன்றி வேறில்லை. பாசத்துக்கே ஞானம் இருப்பதாக உலகில் நிறுவ முடியாதே; மேற்கோளுக்குக் கூறும் ஏதுவும், 'அதுதான் நிருபிக்கில் இன்று' என வந்தது.

கானல் நீரை, நீர் வேட்கை தீர்க்கும் நீர் என்று ஓடிவரும் பேதைக்கு, அணுகி வந்தவுடன் அக் கானல்நீர் பொய்யென்று தோன்றி விடும். அது போன்றதே, ஆராய்ந்து காணாதவர்க்கு

அசத்தினிடத்தில் அறிவு உண்டாகும் என்று தோற்றுவது; ஆராய்ந்து பார்ப்போர்க்கு அது, அறிவில்லாததே என்று தெரியும்; ஆகவே நிறுவ இயலாது.

''பேய்த்தேர்நீ ரென்றுவரும் பேதைக்கு மற்றணைந்த
பேய்த்தேர் அசத்தாகும் பெற்றிமையின்—வாய்த்ததனைக்
கண்டுணர்வார் இல்வழியிற் காணும் அசத்தின்மை,
கண்டுணர்வார் இல்லதெனக் காண்.''

கானல் நீர் உவமையால் இச்செய்யுள், அவ்வுண்மையை விளக்கும். இஃது, ஆசிரியர் சொன்ன காரணத்தை எடுத்துக் காட்டுடன் மேலும் வலியுறுத்தியபடியாகும்; நிறுவ முடியாது என்பது கருத்து.

பொருள் :

பேய்த்தேர் நீரென்று வரும் பேதைக்கு மற்று அணைந்த பேய்த்தேர் அசத்தாகும் பெற்றிமையின் - கானல்நீரை நீரென்று கருதி வருகின்ற நீர் வேட்கைப் பேதைக்கு அதனை அணைந்த போது பேய்த்தேர் பொய்யாகத் தெரியும் தன்மை போல; வாய்த்து, அதனைக் கண்டுணர்வார் இல் வழியின்,—குரவன் அருள் மொழி வாய்த்து, அசத்துப் பொருளை அசத்துப் பொருளாகவே ஆராய்ந்து காண்பார் இல்லாத நிலையில் அசத்து இன்மை காணும் மற்றவர் அதனை அசத்துத் தன்மை இல்லாத சத்துப் பொருளாகவே காண்பர்; கண்டுணர்வார், இல்லது - ஆராய்ந்து பார்ப்பார்க்கு, அது அறிவில்லாத பொருளேயாகும்; எனக் காண் - என்று அறிந்துகொள்க.

முதல் வரியில் வந்த மற்று என்பது வினைமாற்று. பெற்றிமையின், இதில் வரும் 'இன்' உவமஉருபு; குரவர் அருள்மொழி கிடைப்பது அருமையாதலால், வாய்த்து என வந்தது. மற்றவர் என்பது அவாய்நிலை; அசத்து இன்மை - அசத்தில்லாத சத்தெனவே; இல்லது, அறிவில்லாததே!

சத்து அசத்தை அறியாதென்றும் அசத்து சத்தை அறியாதென்றும் இந்த இரண்டு பொருள்களைப் பற்றியும் வந்ததனால், இரண்டையும் அறிந்து கொள்வதற்கு வேறு பொருள் என்ன இருக்கிறது என்று எண்ணம் எழும்; அந்த இரண்டிற்கும் வேருய் இரண்டையும் அறியத்தக்க, (சத்தின் இயல்பும் அசத்தின் இயல்பும் உடையதாய்ச்) 'சதசத்தாய்' உயிரென்று ஒன்று இருக்கவேண்டும் என்று முடிக்கப்பட்டது.

(தொடரும்)

# தமிழின் தலைமையை நாட்டும் தனிச்சொற்கள்

[ஞா. தேவநேயன்]

8. கும்மல்

உம்—கும். கும்முதல்=கூடுதல், மிகுதல், திரள்தல், நிறைதல்.

கூடுதற் கருத்தினின்று குவிதற் கருத்தும்; குவிதற் கருத்தினின்று கூம்புதல், மூடுதல், மறைதல், அடக்கமாதல், அமைதியாதல், குறைதல் முதலிய கருத்துக்களும்; பிறக்கும்.

இக் கருத்துக்களில் தோன்றும் வினைச் சொற்கள், செயப்படுபொருள் குன்றிய வினையாகவும் குன்றா வினையாகவு மிருக்கும்.

கூடுதல் வினை, காட்சிப் பொருளதும் கருத்துப் பொருளது மாகப் பல திறத்தது.

கும்—கும்மல்=1. அரிசி, உப்பு, காய்கறி முதலிய பொருள்களின் குவியல். சந்தையிற் காய்கறிகளைக் கும்மல் கும்மலாகக் குவித்து வைத்திருப்பார்கள். 2. மக்கட் கூட்டம், கும்பல்.

கும்மலி—கும்மல்=பருத்தவள். (யாழ்ப்.)

கும்மிருட்டு=திணிந்த இருட்டு, காரிருள்.

கும்—கம் — கமம் = நிறைவு. "கமம்நிறைந் தியலும்" (தொல். உரி. 57).

கம்—கம. கமத்தல்=நிறைதல். "கமந்த மாதிரக் காவலர்" (கம்பரா. மிதிலைக். 132).

கும்—குமு—குமுக்கு=1. கூட்டம் (இ. வ.). 2. பெருந்தொகை. (W.) 3. மொத்தம். பண்டங்களை யெல்லாம் குமுக்காய் வாங்கினான். (W.)

கும்மெனல்=மணம் வீசுதல்.

"தொண்டைமலரேகும் கும்கும் என்னக்
கோயம்புத்தூர்நாடி நடந்துவா பின்கூடி"

(நாடோடிப்பாட்டு)

குமுகு மெனல்=மணம் வீசுதற் குறிப்பு.

"மணந்தான் குமுகுமென் றடிக்க வில்லை" (தனிப்பா. 1, 389 : 44).

குமுகுமுத்தல்=மணம் வீசுதல். "பசுமஞ்சள் குமுகுமுக்க" (அழகர்கல. 10).

கும்—கம். கம்மெனல்=மணம் வீசுதற் குறிப்பு.

"ஒருங்குபிணி யவிழக் காடே கம்மென் றன்றே" (அகநா. 23).

பூக்கடைக்குப் போனால் மணம் கம்கம்மென் றடிக்கும். கம்—கம. கமகமத்தல்=மிகமணத்தல்.

கம—கமழ். கமழ்தல்=நறுமணம் வீசுதல். "தேங்கமழ் நாற்றம்" (நாலடி. 199).

சமையலறையில் தாளிக்கிறது இங்கே கமகமவென்று கமழ்கிறது.

மணம் காற்றொடு அல்லது ஒரு பொருளொடு கலக்குந் தன்மையது. ஆதலால், கலத்தற் சொல்லாற் குறிக்கப்பட்டது.

"பூவொடு சேர்ந்த நாரும் மணம் பெறும்" (பழ.)

ஒ. நோ: மணத்தல்=கலத்தல், கமழ்தல். மன்றல்=கலத்தல், கமழ்தல். வெறுத்தல்=செறிதல். வெறு—வெறி=மணம்.

கும்—கும்பு. கும்புதல்=கூடுதல்.

கும்பு=திரள், கூட்டம். தெ. கும்பு (gumpu), வ. கும்ப (gumpha).

அங்கே ஒரு கும்பு கூடியிருக்கிறது.

கும்பு—கும்பல்=கூட்டம். ஆட்கள் கும்பல் கும்பலாகக் கூடி நிற்கிறார்கள்.

கும்பு—கும்பை=குடிசைத் திரள், சேரி. பறைக்கும்பை. (உ. வ). தெ. கொம்ப (kompa).

கும்பு—குப்பு. குப்பம்=1. கூட்டம். "குப்பமந்திரங்களெல்லாம்" (குற்றா. தல. கவுற்சன. 8). 2. குவியல். 3. செம்படவர் குடிசைத் திரள், நெய்தல் நிலச்சிற்றூர். எ-டு: தாழங்குப்பம், மஞ்சக் குப்பம். 4. நாட்டுப்புறச் சிற்றூர். குப்பக்காடு=பட்டிக்காடு. 5. அடவி, காடு. (பிங்.). மரா. கும்ப (kumpa).

குப்பம் (கூட்டம்)—தெ. குப்ப, க. குப்பெ.

குப்பம் (சிற்றூர்)—தெ. குப்பமு.

குப்பம் — குப்பல் = 1. கூட்டம் (W.). 2. குவியல். 3. திரண்ட மேடு (திவா.).

குப்பு—குப்பை=1. குவியல். "உப்பின் பெருங்குப்பை" (திரிகடு. 83). 2. நெற்குவியல். "குன்றெனக் குவைஇய குன்றுக் குப்பை" (பொருந. 244). 3. திரள். "மன்பெரும் பவழக் குப்பை வாலணி கலஞ்செய் குப்பை" (சீவக. 114). 4. கூட்டம். "கோட்சுரு வினத்தொடு முதலைக் குப்பைகள்" (சீவக. 95). 5. உரக் குவியல். 6. வீட்டிலும் தெருவிலும் கூட்டி வாரவேண்டிய கழிவுப் பொருட்கள். 7. மலம் (இடக்க ரடக்கல்).

ம., தெ. குப்ப, க. குப்பெ.

குப்பை— (குவியல்)—*AS*, heap, *OS*. hop, *OE*. heap *ME*. heep, *E*. heap, *Du*. hoop, *Ice*. hopr, *Dan*. hob, *Swed*. hop, *G*. haufe, *OHG*. hufo, *Russ*. kupa, *Lith*. kaupas.

கும்—குமி. குமிதல்=குவிதல், திரள்தல்.

ம. குமி, தெ. குமி (g).

குமித்தல்=திரளச் செய்தல்.

குமி—குமிழ்=1. நீர்க்குமிழி. 2. பாதக்குறட்டின் உருண்டு திரண்ட புடைப்பு அல்லது முளை. 3. எருத்தின் திமில்.

குமிழ்—குமிழி=1. நீர்க்குமிழி. "குமிழிவிட் டுமிழ்குருதி" (சீவக. 2239). 2. பாதக் குறட்டின் குமிழ்.

குமிழ்த்தல்=குமிழியிடுதல். குமிழித்தல்=குமிழி கொள்ளு தல்.

கும்—குமர்=1. திரண்ட இளமை. ஒ. நோ: விடைத் தல்=விறுகொண்டு விறைத்தல். விடை=வலிமையுள்ள இளம் பருவ வுயிரி. 2. கன்னிமை. "குமரிருக்குஞ் சசிபோல்வான்" (குற்று. தல. தருமசாமி. 47). 3. அழியாத் தன்மை. "குமருறப் பிணித்த பைம்பொற் கொடி" (பாரத. இந்திரப். 32.)

குமர்—குமரன்=1. இளைஞன். "இருந்தகுலக் குமரர் தமை யிருகண்ணின் முகத்தழகு பருகநோக்கி" (கம்பரா

மிதிலைக். 157). 2. இளைஞனை முருகன். "குன்றுதேரூடிய குமரற் போற்றுவாம்" (கந்தபு. கடவுள். 16).

குமர்—குமரி=1. பூப்படைந்த இளம்பெண், இளைஞை. "குமரிமணஞ் செய்து கொண்டு" (திவ். பெரியாழ். 3 : 8 : 3). 2. பூப்படைந்து மணவாத பெண்டு. 3. அழியாத் தன்மை, அழிவின்மை. "குமரிக்கூட்டிற் கொழும்பல் லுணவு" (சிலப். 10 : 123). 4. என்றுங் கன்னியா யிருப்பவளாகக் கருதப் படும் காளித் தெய்வம். "விழிநுதற் குமரி" (சிலப். 11 : 214). 5. காளிபெயர் கொண்ட (பழம்பாண்டி நாட்டு) மலைத் தொடர். "குமரிக்கோடுங் கொடுங்கடல் கொள்ள" (சிலப். 11 : 20). 6. அவள் பெயர் கொண்ட ஆறு. "வடவேங்கடந் தென்குமரி" (தொல். பாயி.) 7. குமரி மலையைத் தென் னெல்லையாகவும் குமரியாற்றை வடவெல்லையாகவுங் கொண்ட பழம்பாண்டி நாடு, குமரிக்கண்டம்.

குமரிருட்டு (குமரியிருட்டு), குமரிவாழை என்பன இளமை யையும்; குமரிவேட்டம், குமரிப்போர் என்பன முதல் நிகழ்ச்சி யையும்; குமரிப்படை, குமரிமதில் என்பன அழியா நிலைமையை யும் உணர்த்தும்.

குமர், குமரன், குமரி, என்னுஞ் சொற்கட்குத் திரண்ட இளமை என்பதே அடிப்படைப்பொருள். ஒ. நோ : முருகு= இளமை. முருகு—முருகன்=இளைஞன், குமரன், வள்ளிமணாளன், குறிஞ்சி நிலத்தெய்வம்.

வடமொழியாளர், குமரகுமரியரை ஆரியத்தெய்வமாகவும், அவர் பெயரை ஆரியச் சொல்லாகவுங் காட்டல் வேண்டி, குமரன் என்பதைக் குமார என்றும் குமரி என்பதைக் குமாரீ என்றும், ஈற்றயலுயிர் நீட்டி, மகன் மகள் என்று முறையே பொருள் குறித்து, குமார என்பதைக் கு+மார என்று சிதைத்து, 'எளிதில் இறப்பது' ("easily dying") என்று பொருட் கரணியங் கூறுவர்.

குமரன் குமரி என்னுஞ் சொற்கட்குத் தமிழில் இளைஞன் இளைஞை என்றே யன்றி, மகன் மகள் என்னும் பொருளில்லை. இவ்விரு சொற்கட்கும் கும் என்பதே மூலம் என்றும், ஆரியத் தொன்மக் கதைப்படி முருகன் சிவனுக்கு மகன் எனினும், காளி அவனுக்கு மகளாகாள் என்றும், எளிதிலிறப்பது குழப்பருவத்தி லும் கிழப்பருவத்திலுமன்றி மழப்பருவத்தி லில்லையென்றும், அறிதல் வேண்டும்.

இந்தச் சுமையைத் தூக்கமுடியாத நீ ஒரு குமரன் என்று இருக்கலாமா என்று பெண்டிர் வினவுவதையும், "கோடிச் சேலைக்கு ஒரு வெள்ளை, குமரிப்பெண்ணிற்கு ஒரு பிள்ளை" என்னும் பழமொழியையும், நோக்குக. கும்—கும்மை—கொம்மை=இளமை. (திவா.).

மணமாகாத இளைஞனையும் இளைஞையையும் செல்வன் செல்வி என்று அடைகொடுத்துப் பெயர் குறிப்பது, குமரன் குமரி என்பன வடசொல்லென்னும் அறியாமையை அடிப்படையாகக் கொண்டது. செல்வன் செல்வி என்று மணமக்களைக் குறிப்பதே மரபாதலால், Master, Miss என்னும் அடைகளை இனிக் குமரன் குமரி என்றே தமிழிற் குறிக்க.

கும்—கும்மி=1. கை குவித்தடித்தல். 2. அங்ஙனம் அடித்தாடும் விளையாட்டு. 3. அவ் விளையாட்டுப் பாட்டு.

ம. கும்மி, தெ. கொப்பி (gobbi.)

கும்—கொம்—கொம்மை. கொம்மை கொட்டுதல்=கை தட்டி யழைத்தல்.

கும்—கும்பு—கும்பிடு. கும்பிடுதல்=கைகுவித்து வணக்கஞ் செய்தல். ம. கும்பிடு.

கும்பிடு—குப்பீடு=கைகுவிக்கும் வணக்கம்.

கும்பு—கூம்பு. கூம்புதல்=1. குவிதல். "செய்ய கமல மலர் கூம்ப" (நைடத. சந்திரோ. 2). 2. ஒடுங்குதல். 3. ஊக்கங் குறைதல். "வடவர் வாடக் குடவர் கூம்ப" (பட்டினப். 276).

ம. கூம்பு.

கூம்பு=1. பூமொட்டு. "தாழைக் கூம்பவிழ்ந்த வொண் பூ" (ஐந். ஐம். 49). 2. தேர்மொட்டு (திவா.). 3. கப்பற் பாய்மரம். "கூம்பு முதன்முறிய வீங்குபிணி யவிழ்ந்து" (மணி. 4 : 30).

ம. கூம்ப, க. கூவே.

கூம்பு—கூப்பு. கூப்புதல்=குவித்தல். "காலையு மாலையுங் கைகூப்பிக் கால்தொழுதால்" (தனிப்பா.).

கும் — குமுது — குமுதம்=கதிரொளியிற் கூம்புவதாகச் சொல்லப்படும் ஆம்பல். கும்முதல்=கூடுதல், குவிதல்.

குமுதம்—வ. குமுத.

வடமொழியாளர் குமுதம் என்னும் சொல்லை வடசொல்லாகக் காட்டல் வேண்டி, அதைக் கு+முத என்று பிரித்து, "என்ன மகிழ்ச்சி!" என்னும் உணர்ச்சி யூட்டுவதாகப் (exciting what joy!") பொருட்கரணியங் கூறுவர். அவர் சொற்பொருள் கொண்ட வகை வருமாறு:

கூ (ஒரு வினாச்சொல்)—கு=எவ்வாறு (how), முத=மகிழ்ச்சி (joy).

குமுதத்தின் மறுபெயரான ஆம்பல் என்னுஞ் சொல்லும், தமிழ்ப் பொருட்கரணியத்தையே வலியுறுத்தும்.

அம்பல்=பேரரும்பு. அம்பல்—ஆம்பல்=கதிரொளியிற் பேரரும்புபோற் குவியும் மலர்.

கும்முதல்=குவிதல், மூடுதல், அடைத்தல், ஒலிகுறைதல், ஒளிகுறைதல். கும்—கம்.

கம்மெனல்=ஓசையடங்கற் குறிப்பு. "கானமுங் கம்மென் றன்றே" (நற். 154).

கூடத்திலுள்ள வாசல் பலகணிகளை யெல்லாம் அடைத்து விட்டால், உள்ளே கம்மென்றிருக்கும் (உ. வ.).

கம்மென்றிரு=பேசாது அமைதியாயிரு.

கம்முதல்=1. குரல் குன்றுதல். "மென்குரல் கம்மாமே" (குமர. பிர. முத்துக். 18) 2. ஒளி குறைதல்.

கம் — கம்மல் = 1. குரலடைப்பு, தொண்டைக்கம்மல். 2. விளைச்சற் குறைவு. பயிர் கம்மலாய்ப் போயிற்று. 3. விலைக் குறைவு. விலை கம்மலாயிருக்கிறது. (W).

கம்—கம்மி=குறைவு. பத்துரூபா கம்மியா யிருக்கிறது. கம்மி—உ. கமீ.

மூடுதற் கருத்தினின்று மறைப்பு, அடக்கம், மருமம் ஆகிய கருத்துக்கள் தோன்றும்.

கும்—குமு—குமுக்கு—கமுக்கு—கமுக்கம்=மரும வடக்கம். "மூடிக்கொண்டிருந்தால் கமுக்கம், திறந்தால் வெட்டவெளி." (பழ.)

கமுக்கக்காரன்=அடக்கமுள்ளவன்.

அவரை அந்தப் பதவிக்கு அமர்த்தினதைச் செய்தித்தாளில் வெளிவரும்வரை கமுக்கமாய் வைத்திருந்தார்கள்.

கும்—கும்பு—கும்பம்=குவிந்து திரண்டிருக்கும் கலம். 2. கும்ப வடிவான மேற்கட்டிடம் (dome). 3. கும்பம் போன்ற யானை மண்டை. 4. கும்ப வோரை. 5. கும்பமாதம் (மாசி). கும்பம்—வ. கும்ப (kumpha).

கும்பாபிஷேகம் என்னும் வடசொல்லைக் கும்பமுழுக்கு என்றே சொல்லலாம்; குடமுழுக்கு என்று சொல்ல வேண்டிய தில்லை. கும்பம்—கும்பா=அரைக் கும்ப வடிவான மாழை புண் கலம்.

கும்பக் குடம்=தேரின்முடி.

கூடு என்னும் வினையின் நிகழ்கால வெச்சம் (Infinitive mood), உடன் ஒடு ஓடு என்னும் கருவி (3 ஆம்) வேற்றுமை யுருபுகள் போல் உடனிகழ்ச்சிப் பொருள் தரும்.

எ-டு: நாய்கூட (நாயொடு) நம்பிவந்தான்.
தந்தைகூட (தந்தையொடு) மகனும் பாடினன்.

கும் என்னும் வினை கூடு என்பதன் ஒப்பொருட் சொல் (synonym) லாதலால், கும்ம என்னும் நிகழ்கால வினையெச்சம் கூட (with, together, together with) என்பதுபோல் உடனிகழ்ச் சிப் பொருள் தரல்வேண்டும்.

கும்மல் (குவியல்)—L. *cumulus*, a heap, pile, mass.

L. *cumulo*, to heap up.

ஆங்கிலம் cumulus என்னும் இலத்தீன் சொல்லினின்று cumulate (கும்மலிடு) என்னும் வினைச் சொல்லைத் தோற்று விக்கும். அதினின்று accumulate (ad+cumulate) என்னும் வினைச்சொல் எழும்.

cumulus என்னுஞ் சொல்லின் அடியான cum என்பது, இலத்தீனில் உடனிகழ்ச்சிப் பொருள் முன்னொட்டாகப் (pref.) பெருவழக்காய் வழங்குகின்றது.

எ-டு: cum bona venia=with your kind indulgence.
cum grana salis=with a grain of salt.
cum multis aliis=with many other things.
cum notis variorum=with notes of various (critics).
cum privilegio=with privilege.

cum என்னும் இலத்தீன் முன்னொட்டு, முதற்கண் com என்று திரிந்து, பின்னர் வருஞ்சொல் முதலெழுத்திற்கேற்ப con, col, cor என்றும் வேறுபடுகின்றது.

எ - டு: combustum, commodus,
eommunico, compendium;
concretus, condemno, confero, conservus;
collabor, collega; corrector, corruptus.

ஆங்கிலத்தில் நூற்றுமேனி நாற்பான் சொற்கள் இலத்தீனுதலால், com, con, col, cor என்னும் முன்னொட்டுக்களைக் கொண்ட சொற்கள் ஏராளமாய் வழங்குவதைக் காணலாம்.

எ - டு: combine, commence, compos, communicate;
concord, condole, confuse, console;
collect, college; correspond, corrode.

com என்னும் இலத்தீன் முன்னொட்டு, co என்றும் குறுகி, இலத்தீனிற் சில குறிப்பிட்ட எழுத்துக்கட்கு முன்னும், ஆங்கிலத்தில் எல்லா எழுத்துக்கட்கு முன்னும், வழங்கும்.

"*co*—,pref. *L* short form of *com*—(*cum* prep. with), used in—*L* only before vowels, h, gr, and (in tne correct clasical form) n, but in *E* as living pref. before any letter." என்று The Concise Oxford Dictionary கூறுதல் காண்க.

எ - டு: இலத்தீன்.

coarguo, cognosco, cohabitare.

ஆங்கிலம்

co-adjust, co-eoeducation, co-operate, coheir, co-partner, co-religionist, co-tenant, co-worker.

உடனிகழ்ச்சிப் பொருளுணர்த்தும் கும் (cum) என்னும் இலத்தீன் முன்னொட்டு, கிரேக்கத்தில் சும் (sum) என்று திரிந்துள்ளது. அதை ஆங்கிலர் சிம் (sym) என்று திரித்து வழங்கி வந்திருக்கின்றனர். அத்திரிபும், syn, syl என்று வருஞ்சொன் முதலிற்கேற்ப வேறுபடும்.

எ - டு: symbol (sumbolon), sympathy (sumpatheia), symphony (sumphonia), symposium (sumposion), symptom sumptoma);

synagogue (sunagoge), syndic (sundikos), synonym (sunonumon), syntax (suntaxis), synthesis (sunthesis);

syllable (sullabe), syllepsis (sullepsis), syllogism (sullogismos).

சம் (ஸாம்) என்னும் கிரேக்க உடனிகழ்ச்சிப் பொருள் முன்னொட்டு, கிரேக்க நாட்டிற்குக் கிழக்கில் தோன்றிய கீழை யாரியத்தில் ஸம் (sam) என்று திரிந்துள்ளது.

இங்குக் கீழையாரியம் என்றது, வேத ஆரியரின் முன்னோர், இந்தியாவிற்கு வருமுன் ஈரானுக்கும் காந்தாரத்திற்கும் இடைப் பட்ட நிலப்பகுதியில் வதிந்திருந்தபோது வழங்கிவந்த மொழி யாகும்.

உடன் (கூட), உடன்கூடிய, கலந்த, கலந்து, நிறைவாக என்று பொருள்படும் ஸம் என்னும் முன்னொட்டைப் பெற்ற முதன்மையான சொற்கள், இன்று சமற்கிருதத்தில் நூற்றுக் கணக்காக வுள்ளன.

எ - டு: ஸம்க்யா, ஸம்க்ரக, ஸம்க்ராந்தி, ஸம்க்ருத, ஸம்க, ஸம்கட, ஸம்கதி, ஸம்கம, ஸம்கர, ஸம்கல்ப, ஸம்கீத, ஸம்கீர்த்தந, ஸம்கீரண, ஸம்சர், ஸம்சித, ஸம்ஜீவிந், ஸம் தர்ப, ஸம்தாந, ஸம்தோஷ, ஸம்ந்யாஸ, ஸம்பத், ஸம்பந்த, ஸம்பவ, ஸம்பந்ந, ஸம்பார, ஸம்பாவந, ஸம்பாஷண, ஸம்ப் ரத, ஸம்ப்ரதாய, ஸம்ப்ரதாந, ஸம்ப்ரோக்ஷண, ஸம்பூர்ண, ஸம்போக, ஸம்போதந, ஸம்மதி, ஸம்மேளந, ஸம்யுக்த, ஸம் யோக, ஸம்ரக்ஷண, ஸம்வத்ஸர, ஸம்வாத, ஸமஷ்டி, ஸமய, ஸமர்ப்பண, ஸமஸ்த, ஸமாஸ, ஸமாச்சார, ஸமுச்சய, ஸமு தாய, ஸமூஹ, ஸமேத, ஸம்ஸ்க்ருத ஸம்ஸ்கார, ஸம்ஜ்ஞா, ஸம்ஸ்தாந, ஸம்ஸர்க, ஸம்ஸார ஸம்ஹார, ஸம்ஹிதா.

ஸம் என்னும் முன்னொட்டு ஸஹ என்றும் திரியும்.

ஒ. நோ: ஸஹகமந, ஸஹோதர.

ஸம் என்னும் முன்னொட்டு 'ஸ' என்றும் குறுகும்.

எ - டு. ஸகல (சகளன்)=உருவத் திருமேனி.

இங்ஙனம், கும் என்னும் தென்சொல், ஆரிய மொழிகளில் முறையே, கும்—கம். கம்—கன்—கோ. கும்—ஸாம், ஸாம்—ஸம்—ஸ என்று திரிந்துள்ளது.

ஆங்கிலம் கும் என்பதைக் கம் என்று ஒலி திரித்தும் வரி (எழுத்து) திரிக்காது, இன்றும் இணைப்புச் சொல்லாக (cojunction) வழங்கி வருகின்றது.

எ - டு : pension-cum-provident fund.
agriculture-cum-industry.

ஸம் என்னும் முன்னொட்டு சமற்கிருதத்திற் போன்றே வேதமொழியிலும் பெருவழக்காக வுள்ளது. மேலையாரியமும் பிராகிருதமுங் கலந்தது வேதமொழி யென்றும், வேதமொழியும் தமிழுங் கலந்தது சமற்கிருத மென்றும், வேறுபாடறிதல் வேண்டும். இவ்விரு மொழியும் ஒருகாலும் வழங்கியிராத இலக்கிய மொழிகளே.

ஸம் என்னும் முன்னொட்டை நீக்கிவிடின், நூற்றுக்கணக்கான முதன்மைச் சொற்கள் வடமொழியி லிரா. அவை நீங்கின், வேதமொழியும் சமற்கிருத மொழியும் மொழி யென்னுந் தகுதியின்றி, இருபெருஞ் சொற்றொகுதிகளாகவே முடியும்.

ஸம்ஸ்க்ருதம் என்னும் பெயரே, ஸம் என்னும் முன்னொட்டால் ஏற்பட்டதே. வேதமொழியுந் தமிழுங் கலந்து செய்யப்பட்டது என்னும் பொருளில், அம் மொழி அப்பெயர் பெற்றது. ஸம் = உடன், கலந்து. க்ருத = செய்யப்பட்டது. தமிழையும் ஒரு பிராகிருதமாகக் கொண்டு, அதைத் த்ராவிட ப்ராக்ருத் என்பர் வடமொழியாளர். ப்ரா = முந்தி. முந்திச் செய்யப்பட்டது பிராகிருதம்; பிந்திக் கலந்து செய்யப்பட்டது சமற்கிருதம். ஸம்க்ருத என்றாலே போதும். பிற்காலத்தில் 'ஸ்' என்னும் எழுத்தை இடைச்செருகி ஸம்ஸ்க்ருத என்றனர்.

மேல் வரைந்த கும் என்னுஞ் சொல் வரலாற்றினின்று தென்மொழியின் (தமிழின்) முன்மையையும் வடமொழியின் பின்மையையும் தெற்றெனத் தெரிந்து கொள்க.

(தொடரும்)

## ஒரு திருத்தம்

சென்ற செல்வி யிதழ் கூஉச-ஆம் பக்க இறுதியில்.

"பாரிசுச் சமற்கிருதக் கழகம் உருவா 2 கோடிக்கு மேலும் வழங்கியுள்ளது''.

என்பதை நீக்கிவிட்டு, "பாரிசுச் சமற்கிருதக் கழகம் ஒரு பெருந்தொகை வழங்கியுள்ளது. எல்லாம் சேர்ந்து இருகோடியாகலாம்''.

என்பதைச் சேர்த்துக் கொள்க.

# மெய்ப்பொருளியல் பேராசிரியர் இராமலிங்கனார் மறைவு

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் மெய்ப்பொருளியல் துறைத் தலைவராகப் பணியாற்றிய பேராசிரியர் திரு. சி. இராமலிங்கனார் அவர்கள் 29—11—77 இல் தமது 49 ஆம் அகவையில் இறைவன் திருவடி நிழல் எய்தியமை தமிழ்நாட்டிற்கு ஒரு பேரிழப்பாகும்.

1928ஆம் ஆண்டில் சிட்டத்தூர் சாமராச முதலியாரவர்களின் ஒரே மகனாகப் பிறந்த இராமலிங்கனார் மெய்ப்பொருளியல் இளங்கலை (சிறப்பு)-[பி.ஏ. (ஆனர்சு)] பட்டமும், 'திருவள்ளுவரின் மெய்ப் பொருட் கொள்கை' என்பது பற்றி ஆய்வுசெய்து இலக்கிய முதுவர் (எம். லிட்) பட்டமும் பெற்றுள்ளார். மாணிக்கவாசகரின் அருள் நுகர்ச்சி பற்றிப் பண்டாரகர் பட்டத்திற்கு ஆய்வுசெய்து கொண் டிருந்தார். அது நிறைவுறவில்லை.

காஞ்சி பச்சையப்பன் கல்லூரியில் தம் ஆசிரியப் பணியைத் தொடங்கிய இராமலிங்கனார் ஆங்கு ஓராண்டு பணியாற்றிய பின் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் மெய்ப்பொருளியல் துறை விரி வுரையாளராகப் பணியேற்றார். பூம்புகார் பண்பாட்டுக் கல்லூரியின் தொடக்க நிலையில் அதன் தலைவராகப் பொறுப்பேற்று அதன் வளர்ச்சிக்கான திட்டங்களை வகுத்து ஈராண்டுகள் பணியாற்றினார். மீண்டும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்கு வந்து மெய்ப்பொரு ளியல் துறையில் துணைப் பேராசிரியராகவும், துறைத் தலைவராகவும் பணியாற்றி வந்தார். மதுரைப் பல்கலைக் கழகத்தின் சைவசிந்தாத்த இருக்கைக்குத் தலைவராக அழைக்கப் பெற்றும், அதனை ஏற்க மறுத்து அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலேயே பணியாற்றும் இயற்கையன்பு பூண்டிருந்தார்.

இராமலிங்கனார் இளமை முதலே தமிழ்ப்பற்றும், சமயப்பற்றும் வாய்க்கப்பெற்றவர். ஆங்கிலப் புலமையும், உளவியல், உடலியல், மருத்துவம் முதலியவற்றில் ஈடுபாடும் உடையவர். வள்ளல் இராம லிங்க அடிகளார்பால் மிகுந்த பற்றுக்கொண்ட இராமலிங்கனார் ஆண்டுதோறும் ஆங்கு நிகழும் பெருவிழாவில் அமுது அளிப்பு செய்துவந்தார். கட்டுரை வன்மையும் நாநலமும் வாய்ந்த இவர் திரு. வி. க. அவர்கள்பால் அன்பு பூண்டு அணுக்கமாகப் பழகி அவர்தம் நன்மதிப்பைப் பெற்றார். அதனாலேயே திரு. வி. க. அவர் களின் பெயர்த்தியான சிவயோகவல்லி என்னும் மங்கை நல்லாரை மணக்கும் வாய்ப்பு இராமலிங்கனார்க்கு அமைந்தது. பேராசிரி யர்க்கு அன்னையாரும் துணைவியாரும் மகளொருத்தியும் மகனொருவ னும் உள்ளனர்.

'HISTORY OF PHILOSOPHY (Eastern and Western)' என்ற நூல் இராமலிங்கனாரால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தினால் வெளியிடப்பட்டுள்ளது. 'Introduction to Philosophy' என்ற நூலையும் இராமலிங்கனார் தமிழாக்கம் செய்துள்ளார். அதனைத் தமிழ்நாட்டு அரசு வெளியிட் டுள்ளது. 'குருநானக்' என்பது பேராசிரியரின் தமிழ் நூலாகும்.

இராமலிங்கனாரின் நிலையான பணிகள் அவர்தம் அறிவு ஆற்றல்களை விளக்கிநிற்கும்.

'வாழ்க இராமலிங்கனார் புகழ்'

# செய்திகளும் குறிப்புக்களும்

## முதுபெரும்புலவர் 'அரசு' அவர்கட்குப் பாராட்டு

**19—3—78** ஞாயிறு மாலை 5 மணி அளவில், கழக நூலாசிரிய ரான முதுபெரும்புலவர் அரசு அவர்கட்கு, நீண்டகாலம் அவர்கள் தமிழாசிரியராகப் பணியாற்றிய பூவிருந்தவல்லி அரசினர் உயர் நிலைப் பள்ளியில் அவர்தம் பழைய மாணவர்களின் சார்பில் சட்ட மன்ற உறுப்பினர் திருமிகு இராசரத்தினம் அவர்கள் தலைமையில் பாராட்டுவிழா நடைபெற்றது.

பெருமக்கள் பலர் சார்பிலும் நிறுவனங்கள் பலவற்றின் சார்பி லும் புலவரவர்கட்குப் பொன்னாடையும், நல்லாடைகளும், மலர்மாலை களும் அணிவிக்கப்பட்டன. புலவரவர்கள் பெயரில் பேச்சுப் போட்டிப் பரிசுத் திட்டத்திற்கென மூலத்தொகையாக உருவா 500/- (ஐநூறு) மேற்படி பள்ளித் தலைமையாசிரியரவர்களிடம் வழங்கப்பட்டது.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் சார்பில் கழகப் புலவர் இறைக்குருவனர் விழாவிற் கலந்துகொண்டு கழக ஆட்சியாளர் அவர் களின் வாழ்த்துரையைப் படித்து அளித்தார். மேலும் சந்தனமாலை சூட்டியதோடு கழகச் சார்பில் உருவா 51/- (ஐம்பத்தொன்று)ம், ஆட்சியாளர்தம் அன்பிற்கறிகுறியாக உருவா 50/- (ஐம்பது)ம் ஆக உருவா 101/- (நூற்றொன்று) கொண்ட முடிப்பு வழங்கப்பட்டது. முதுபெரும்புலவர் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்களை யுள்ளிட்ட பெருமக்கள் பலர் பாராட்டி வாழ்த்துரைத்தனர்.

புலவர் திருமிகு அரசு அவர்கள் தமது ஏற்புரையில் தம் தமிழ்ப் பணிகட்கெல்லாம் கழகமே அடிப்படை என்றும், ராஜு முதலியா ராக இருந்த தம்மைப் 'புலவர் அரசு' ஆக்கிய பெருமை கழக ஆட்சி யாளரையே சேரும் என்றும் குறிப்பிட்டார்.

## 166 ஆண்டுப் பழைமைச் சிறப்புடைய நூலகம்

மூலப்பொருள் சேமிப்பு ஏதும் இல்லாமலும், வங்கிகளில் வைப்பு இல்லாமலும், உறுப்பினர் கட்டணத் தொகையாலும் ஊரார் நன் கொடையாலும் மட்டுமே கடந்த 166 ஆண்டுகளாக நடைபெற்று வருவது சென்னை இலக்கியக் கழகத்தின் நூலகமாகும்.

இந்த நூலகத்தில் ஏறக்குறைய ஒன்றரை நூறாயிரம் புத்தகங்கள் உள்ளன. இவற்றுள் 16 ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்ட நூல்கள் மட்டும் முப்பதாயிரத்திற்குமேல் இருக்கும். ஆங்கிலம், பிரஞ்சு ஆகிய மொழிகளில் முதன்முதலில் வெளிவந்த இலக்கிய நூல்களும், கிழக்கிந்திய கம்பெனி ஆட்சி பற்றிய அரிய நூல்களும் இடம்பெற் றுள்ளன. இந் நூலகம், நுங்கம்பாக்கத்திலுள்ள கல்வி இயக்குநர் செயலகஞ் சார்ந்த இடத்தில் அமைந்துள்ளது இங்குள்ள நூல்கள் அனைத்துக்கும் புதிய நூற்பட்டியல் தயாரிப்பதற்கும், குழந்தைகள் இலக்கியப் பகுதி ஒன்றும், நுண்கலை நூற்பகுதி ஒன்றும் ஏற்படுத்தி இந் நூலகத்தைப் புதுப்பிக்கவும் இக் கழகத்தினர் முயன்று வருகின்

னர். இப் பணிக்கு 2 நூறுயிரம் ரூபா தேவைப்படும் என்றும் அதனை மாநில, மைய அரசுகளிடமிருந்தும் அனைத்து நாட்டுக் கல்வி. அறிவியல் கழகத்திடமிருந்தும் (UNESCO) பெறுவது எனவும் முடிவு செய்துள்ளனர்.

## தமிழ்நாட்டுத் தமிழர் பேரவை

சென்னை இராசேசுவரி திருமண மண்டபத்தில் 1978 ஏப்பிரல் 7, 8 ஆம் நாட்கள் திருவாளர் வி. வி. இராமசாமி அவர்கள் தலைமையில் இப் பேரவைக் கூட்டம் நடைபெற்றது.

எந்த அரசியல் கட்சியிலும் ஈடுபடாத பல சமய பல குலங்களைச் சார்ந்து தமிழைத் தாய்மொழியாகக் கொண்டு 45 அகவைக்கு மேற்பட்ட தமிழ் மக்களே இப் பேரவையில் உறுப்பினர்களாக இருப்பதற்குத் தகுதியுடையவராவார்கள்.

இப் பேரவைக்குக் காரணங்களாயுள்ளவர்கள் விருதுநகர். வி. வி. இராமசாமி, திரு. கி. ஆ. பெ. விசுவநாதம், காயல்பட்டினம் எம். கே. சையது அகமது, தவத்திரு ஞானப்பிரகாசம், பொள்ளாச்சி நா. மகாலிங்கம், சிதம்பரம் கனகசபை பிள்ளை முதலியோர் ஆவர்.

1954 இல் ஓய்வுபெற்ற மாவட்ட நடுவர் திரு. அ· கசபதி நாயக்கர் அவர்களும் கழக ஆட்சியாளர் திரு. வ. சுப்பையா பிள்ளையும் மற்றுஞ் சில நண்பர்களும் கலந்து பேசித் “தமிழர் பேரவை” என்ற பெயரில் ஒரு நிறுவனத்தைத் தொடங்கி அதற்குரிய விதிமுறைகளெல்லாம் எழுதப்பெற்றன. அதன்பின் அது செயற்படாமல் நின்றுவிட்டது. அதற்கு எழுதப்பெற்ற விதிமுறைகளின் படி ஒன்று கழக ஆட்சியாளரிடம் இருக்கிறது. அதற்கு ஒரு படி எடுத்து உயர்திரு வள்ளல் நா. மகாலிங்கம் அவர்கட்கு 8 - 4—78இல் அனுப்பிவைக்கப்பெற்றது.

## சிவஞானபாடியம் — வேனில் வகுப்பு

மதுரைப் பல்கலைக் கழகத்தில் சிவஞானபாடியம் பற்றிய வகுப்புக்கள் 3-5-78 முதல் 23 5-78 வரை நடைபெறும். கல்லூரிகளில் தமிழ் அல்லது தத்துவம் பற்றிப் போதிக்கும் ஆசிரியர்கள் அதில் சேரலாம். விருப்பமுடையோர், நெறியாளர், தத்துவத்துறை, பல்கலைக்கழகம், மதுரை என்ற முகவரிக்கு எழுதவும்.

### மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(முன் பரல்-சு, ௩௧௭ ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | |
|---|---|
| உயர்திரு. கழக ஆட்சியாளர் அவர்கள், மார்ச்-78 | 100-00 |
| ,, கழக மேலாளர் அவர்கள், மார்ச்-78 | 5-00 |
| திரு. டி. வி. சங்கரகுமார் அவர்கள், திருநெல்வேலி-6. | 5·00 |
| திரு, மு. சிவநேசர் அவர்கள், அரக்கோணம். | 8-00 |

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை, 2/140, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : வ. சுப்பையா.

# பிற பதிப்பாளரின் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| ஒப்பியல் நோக்கு—டாக்டர் வ. சுப. மாணிக்கம் | 6 | 00 |
| தேசிய இலக்கியம்—அ. ச. ஞானசம்பந்தம் | 7 | 00 |
| யுவான் சுவாங்—வி. எஸ். வி. இராகவன் | 9 | 00 |
| இமயபாரதி கவிதைகள்—இமயபாரதி | 4 | 00 |
| இலக்கணத் தொகை யாப்பு பாட்டியல் —டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் | 34 | 00 |
| தொல்லியல் ஆய்வுகள்—டாக்டர் கே. வி. இராமன் | 8 | 00 |
| சிலப்பதிகாரம் காட்டும் தமிழகச் சமுதாயநிலை —நா. செயப்பிரகாசு | 10 | 00 |
| தமிழ்க்காவலன் (நாடகம்) வலவன் | 2 | 50 |
| கலித்தொகையில் உவமைகள்—மணிவேலன், எம். ஏ. | 3 | 75 |
| ஒப்பியல் இலக்கியம் —டாக்டர் க. கயிலாயபதி | 10 | 00 |
| பொன்னடியான் கவிதைகள்—பொன்னடியான் | 6 | 00 |
| நா. காமராசன் கவிதைகள்—எம். எஸ். தியாகராசன் | 4 | 00 |
| வாரியார் வாக்கு—வாரியார் | 3 | 00 |
| மொழித் திட்டமிடுதல்—டாக்டர் கி. கருணாகரன் | 7 | 00 |
| திறனாய்வுச் சிந்தனைகள்—ஜி. ஜான் சாமுவேல் | 10 | 00 |
| திரு அருட்பா உரை நடைப் பகுதி—ஊரன் அடிகள் | 25 | 00 |
| ஜோதி வழியில் வள்ளலார்—கோ. வன்மீகநாதன் | 30 | 00 |
| உழையுங்கள் உயருங்கள் —இரத்தின சண்முகனார் | 5 | 50 |
| அலைகடலின் அற்புதங்கள்—பி. வி. கிரி | 2 | 00 |
| அங்க மச்சங்களும் சாமுத்திரிகா லட்சணங்களும் —சோதிடமணி நாகை முத்துவேலர் | 7 | 50 |
| நல்லவர்கள்—குரும்பூர் குப்புசாமி | 11 | 00 |
| பதினோராவது இரவு—துமிலன் | 10 | 00 |
| விடிவெள்ளி—குரும்பூர் குப்புசாமி | 10 | 50 |
| கதாநாயகி— ,, | 9 | 00 |
| மங்கை நல்லாள்—சி. ஆர். ராஜம்மா | 6 | 00 |
| சுகபவனம்—ரமணி சந்திரன் | 5 | 00 |
| புள்ளிமான்—நாஞ்சில் பி. டி. சாமி | 6 | 00 |
| புதிய அலைகள்—அகர முதல்வன் | 4 | 00 |
| History of China and Japan—K. S. Subramanian | 12 | 50 |
| Manorama—Year Book 1978 | 15 | 00 |

பதிவு எண் : M. 4835

# கழகப் புதிய வெளியீடுகள்

## THE CILAPPATIKARAM

In English by Prof. V. R. Ramachandra Dikshitar
Released by
**Dr. Malcolm S. Adiseshiah,**
*Vice - Chancellor, University of Madras.*

The Cilappatikaram, which relates the tragic story of Kovalan and his wife Kannaki, is the best among the five Tamil Major Epics.

The epic, consisting of three parts, points that the laws of morality are inexorable ; no prayer, no sacrifice, can atone for our sins : we must ourselves suffer the reaction of our deeds. The merit of good deeds alone will help one in his future life.

Such an epic has not yet gained a world-wide reputation for lack of editions in other languages of the world. This translation attempted by V. R. R. Dikshitar was originally published by Oxford, London. Though it had a good reception, reprints were not out in succession. To meet the desire of the present demand, this edition is being released with great efforts. It is hoped that the lovers of Tamil would heartily welcome and support our venture.

Demy Octavo - 460 pp Rs. 50/-

## தமிழில் எழுதுவோம்

ஆசிரியர்:
ஆட்சிச்சொற் காவலர் கீ. இராமலிங்கனர், எம், ஏ.

சிலம்புச் செல்வர் ம. பொ. சிவஞானம் அவர்கள் தலைமையில் மாண்புமிகு அமைச்சர் வீரப்பன் அவர்கள் வெளியிடத் திருமிகு அ. மு. சுவாமிநாதன், ஐ. ஏ. எஸ். அவர்களால் பாராட்டப்பெற்றது. தனித் தமிழ் ஆக்கங் கருதும் அன்பர் கட்கு இந்நூல் ஒரு சிறந்த வழிகாட்டியாகும்.

12.5 × 18.5 செ. மீ. பக்கம் 158 விலை ரூ. 7 50

அப்பர் அச்சகம், சென்னை-1.